# பறம்பு மலை

## (திருக்கொடுங் குன்றம்)




மரு. பரமகுரு
திருவண்ணாமலை ஆதீனம், குன்றக்குடி



மணிவாசகர் பதிப்பகம்
55, லிங்கி தெரு, சென்னை-600 001.

முதல் பதிப்பு: ஏப்ரல் 13, 1992



பறம்பு மலை குடமுழுக்கு விழாவில், 19.4.92 அன்று தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களால் வெளியிடப்பெற்றது.

விலை: 11-00

கிடைக்குமிடம்

மணிவாசகர் பதிப்பகம்

12-B. மேலசன்னதி, சிதம்பரம்-608 001
55, லிங்கிதெரு, சென்னை-600001
28-A. வடக்கு ஆவணி மூல வீதி, மதுரை-625 001
3/4 ராஜவீதி, கோயமுத்தூர்-641 001
28, கிளைவ்ஸ் கட்டடம், தெப்பக்குளம், திருச்சி-620 002
போன்: சென்னை 513 507, சிதம்பரம்: 2799

அச்சிட்டோர்:
கே.பி.டி. இண்டஸ்ட்ரீஸ்
அண்ணாமலைநகர்.

33-1

# கபிலர் பாடிய பறம்புமலை

டாக்டர் ச.மெய்யப்பன்
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

1951 – இல் தெக்கூரில் கலைத்தந்தை கருமுத்து தியாக ராசச் செட்டியார் அவர்களின் விசாலாட்சி உயர்நிலைப் பள்ளியில் பயின்றேன். அப்பொழுது கல்விச் சுற்றுலாவாகப் பறம்புமலைக்கு அழைத்துச் சென்றார்கள், மலைவளம் கண்டோம். உழவர் உழாதன பற்றி எங்கள் தமிழாசிரியர் எங்களுக்கு விளக்கினார். நெல்லும் மாங்கனியும், சீத்தாப்பழமும், சுனை நீரும் நிரம்பக் கிடைப்பதனைக் கண்டேன். அத்தகைய திருமலையினைப் பற்றி வரலாற்று நூலை வெளியிடும் பெருமை 40 ஆண்டுகளுக்குப் பிறகு வாய்ப்புக் கிடைத்துள்ளது.

தமிழ்மாமுனிவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார் சமயஉலகில் புரட்சிகளைச் செய்யப் புறப்பட்ட நேரம், திராவிட முன்னேற்றக்கழகம் செல்வாக்குப் பெற்று வளரத் தொடங்கிய காலம். ஊரில் நாங்கள் ஏற்பாடு செய்த இலக்கியக் கூட்டத்திற்காக அடிகளாரும், நாவலர் நெடுஞ்செழியன் அவர்களும் எங்கள் இல்லத்தில் ஒருவரை யொருவர் முதன்முதலாகச் சந்திக்கிறார்கள். ஆத்திகரும் நாத்திகரும் ஒரே மேடையில் முழங்கியது அன்று ஒரு பரபரப்பான நிகழ்ச்சியாகவும் செய்தியாகவும் அமைந்து பலராலும் பேசவும் எழுதவும் பெற்றது. அந்த நிகழ்ச்சி இன்றும் பசுமையாய் என் மனக்கண் முன் நிழலாடுகிறது.

தமிழகத்தில் சமய உலகில் மாபெரு புரட்சிகளைச் செய்தவர் குன்றக்குடி அடிகளார். நாடறிந்த நாவலர். தமிழ்கூறும் நல்லுலகம் எங்கும் அலைகடலுக்கு அப்பாலும் தமிழும் சைவமும் பரப்பிய சான்றோர். திருநாவுக்கரசர் அருளிய திருநெறியில் நாளும் நின்று நாடுயர நற்பணிகள்

பல செய்யும் பெருமகனார். கிராமங்கள் பொருளாதார வளம்பெறும் குன்றக்குடித் திட்டத்தை அடிகளார் உருவாக்கினார். அது மிகுந்த பயனைத் தருகிறது. நாடு தழுவிய அளவில் செல்வாக்குப் பெற்று வளர்ந்து வருகிறது. தவக்கோலம் பூண்டுள்ள அடிகள் தமிழ்ப்பணியோடு தன்னிறைவுத் திட்டத்தின் மூலம் சமுதாயப்பணியும் செய்து சிறப்பவர். தூய தொண்டுகளால் உயர்ந்து நிற்கும் வணக்கத்துக்குரிய அடிகளார் இட்ட பணியினை மனமுவந்து ஏற்று மணிவாசகர் பதிப்பகத்தின் வாயிலாக இத்திருநூலை வெளியிடுவதில் பெருமையும், பெருமகிழ்வும் கொள்கிறேன்.

400 நல்லநூல்களை வெளியிட்ட பதிப்பகம் திருக்கோயில் பற்றிய 40 நூல்களை வெளியிட்டு உள்ளது. திருப்பணியாகக் கருதி பறம்புமலை என்னும் இந்நூலையும் மகிழ்ச்சியுடன் வெளியிடுகிறது.

குன்றக்குடி ஆதீனத்திற்குச் சொந்தமான கொடுங்குன்றக்கோவில் பற்றிய இந்த அரிய நூலை சிறப்பாக எழுதிய பரமகுரு திருவண்ணாமலை ஆதீனத்தின் இறைபணி செய்யும் அன்பர். தெய்வபக்தியும் தேசபக்தியும் நிரம்பியவர். அடக்கமும் அமைதியும் அவருக்கு அணிகலன்கள். தமிழ்நலம் சான்றவர். தவத்திரு அடிகளாரின் குறிப்பறிந்து வினை முடிக்கும்தொண்டர். செய்வன திருந்தச் செய்து சிறப்புப் பெறுபவர். அவருடைய எழுத்துப் பணியாகிய மகுடத்தில் இந்நூல் ஒளிவீசும் மணியாகத் திகழும். வெறும் தலவரலாறாக இந்நூலை அமைக்காமல் அரிய ஆராய்ச்சி ஏடாக, செய்திக் கருவூலமாக அமைத்துள்ளார். சங்க இலக்கியச் சான்று கொண்டு பறம்பு, பாரி பற்றிய அனைத்துச் செய்திகளையும் ஆராய்ந்து எழுதியுள்ளது இந்நூலின் தனிச்சிறப்பாகும். திருக்கோவிலின் தெய்வ நலன்களையும் சிற்பச் சிறப்புக்களையும் உயிரோவியமாகக் காட்டியுள்ள இந்நூலாசிரியருக்குப் பாராட்டுக்கள். திருவருளும் குருஅருளும் பெற நல்வாழ்த்துக்கள்.

33-1

# முன்னுரை

பறம்புமலை, முல்லைக்குத் தேரீந்த வள்ளல் பாரி வாழ்ந்த புகழ்மலை. புலனழுக்கற்ற அந்தணாளன் கபிலன் வாழ்ந்த தமிழ்மலை. திருஞானசம்பந்த சுவாமிகளின் திருப்பாடல் பெற்ற திருக்கொடுங்குன்றம் என்னும் சிவமலை, இது இலக்கிய உலகில் பறம்புமலை எனவும் சமய உலகில் திருக்கொடுங்குன்றம் எனவும் மக்கள் மத்தியில் பிரான்மலை எனவும் வழங்கப்பெறுகிறது. இத்திருத் தலத்தில் அருள்தரு மங்கைபாகரும் அருள்தரு திருக் கொடுங்குன்றநாதரும் எழுந்தருளி எல்லா உலகுக்கும் வற்றாது முற்றாது அருளை வாரி வழங்கிக் கொண்டிருக் கின்றனர்.

இத் திருத்தலத்திற்கு ஏற்கெனவே தமிழில் தல புராணமும் வரலாற்றுச் சுருக்கமும் உள்ளன. எனினும்சற்று விரிவாக வள்ளல் பாரியின் வரலாறும் இணைந்ததாக எழுதப்பெற வேண்டுமென, அருள்நெறித் தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள் திருவுள்ளம் கொண்டார் கள்; அடியேனை எழுதும்படி பணித்தார்கள். இது அரிய பணி. ஆயினும் குருவருளையும் திருவருளையும் நினைந்து ஏற்று எழுதலானேன். இப்பணியை எனக்கருளிய அருள் நெறித் தந்தையவர்களின் பொன்னார் திருவடிகளைப் போற்றி வணங்குகிறேன்.

பறம்பு நாட்டு எல்லை குறித்து ஒருவாறு முயன்று எழுதப்பெற்றுள்ளது. அறிஞர்களின் ஆய்வுக்குரிய பகுதி அது. அறிஞர்கள் ஏற்புடைய கருத்துக்கள் வழங்குவராயின் பொன்னேபோற் போற்றிக் கொள்ளப்பெறும். இப்பகுதியை எழுதுங்கால் ஆலோசனை கூறி உதவிய என் இனிய நண்பர் வித்துவான் திரு க. கதிரேசன் அவர்களுக்கு என் உள

மார்ந்த நன்றி. திருக்கோயில் பற்றிய செய்திகளைச் சேக ரிக்க உதவிய சிவத்திரு ஆ. சிதம்பரபட்டர் அவர்களுக்கு நன்றி.

குறைந்த காலத்தில் விரைந்து அச்சிட்டு உதவிய மணிவாசகர் நூலகம் உரிமையாளர் பதிப்புச் செம்மல் பேராசிரியர் முனைவர் ச. மெய்யப்பன் அவர்களுக்கு நன்றி கடப்பாடு.

திருக்கொடுங்குன்றத் திருத்தலத் திருக்கோயில் திருக் குட நன்னீராட்டு விழாக் காலத்தில் இந்நூல் வெளியிடப் பெறுவது யான் பெற்றபேறு.

வரலாற்றுப் புகழ்மிக்க இத்தலத்திற்கு, இந்நாள் வரை பெருமை சேர்த்த பெருமக்களுக்கும் இனி வருங் காலத்தில் புகழ்சேர்க்கவிருக்கும் புண்ணியர்க்கும் இந்நூல் காணிக்கையாக்கப்பெறுகிறது. வணக்கம்.

குன்றக்குடி. ஆதீன அடியவன்
9—4—92 மரு. பரமகுரு

# உள்ளடக்கம்

# பறம்பு மலை

## (திருக்கொடுங்குன்றம்)

''ஐந்து கரத்தனை ஆனை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்து அடி போற்றுகின்றேனே!''

— திருமந்திரம்

ஓங்கி உயர்ந்து அணி செய்கின்ற திருக்கோயில்கள் நிறைந்து விளங்கும் நாடு, நம் தெய்வத் தமிழ்நாடு தமிழகத் திருக்கோயில்கள் தமிழர் தம் நாகரிகப் பெட்டகங்கள்; ஓவியம், சிற்பம், இசை, நாடகம் முதலிய கலைகளின் கருவூலங்கள், மக்களின் வாழ்வை அன்பு வாழ்வாக, அற வாழ்வாக, அருள் வாழ்வாக, தெய்வ வாழ்வாக மலரச் செய்யும் பண்பாட்டின் நிலைக்களன்கள்; தெய்வ மணங்கமழும் தீந்தமிழ்ப்பனுவல்களின் பிறப்பிடங்கள்; அழியாத கல்வெட்டுக்களால் அருமைத் தமிழ்நாட்டின் வரலாற்றை எடுத்தியம்பிக் கொண்டிருக்கும் பொன்னேடுகள்; இத்தகைய திருக்கோயில்களில் இறைவன் எழுந்தருளியிருந்து உலக உயிர்களுக்கெல்லாம் வற்றாது முற்றாது திருவருள் சுரந்து வருகின்றான்.

அவற்றுள் மூவர் பாடிய தேவாரம் பெற்ற சிவத்தலங்கள் பெருஞ்சிறப்புடையன. அத்திருத்தலங்களில் பாண்டிய நாட்டில் உள்ள திருத்தலங்கள் பதினான்காகும். இவற்றை ''பாண்டி பதினான்கு தலங்கள்'' என்று கூறுவது மரபு.

''கூடல் புனவாயில் குற்றாலம் ஆப்பனூர்
ஏடகம் நெல்வேலி இராமேசம் — ஆடானை
தென்பரங்குன் றம்சுழியல் தென்திருப்புத் தூர்கானை
வன் கொடுங்குன் றம்பூ வணம்''

என்னும் பாடல் தேவாரம் பெற்ற பாண்டிநாட்டுச் சிவத் தலங்கள் பதினான்கையும் தொகுத்துரைக்கின்றது. அவற்றுள் ஒன்றாக விளங்குவது திருக்கொடுங்குன்றம். இஃது இக்காலத்தில் பிரான்மலை என்று வழங்கப் பெறுகின்றது. சங்க காலத்தில் பறம்பு மலையெனப் புகழ் பெற்றிருந்ததும் இந்தப் பிரான்மலையேயாகும்.

**தலமும் இருப்பிடமும்**

திருக்கொடுங்குன்றம் (பிரான்மலை) பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் மாவட்டம், திருப்புத்தூர் வட்டத்தில் சிங்கம்புணரிக்கு அருகில் அதன் வடக்கில் உள்ளது. காரைக்குடியிலிருந்து மேற்கே 42 கி.மீ. தொலைவிலும் மதுரையிலிருந்து வடக்கே 63 கி.மீ. தொலைவிலும் புதுக்கோட்டையிலிருந்து தென்மேற்கே 45 கி.மீ. தொலைவிலும் உள்ளது. திருப்புத்தூர் திண்டுக்கல் சாலையில் சதுர்வேதி மங்கலத்திலிருந்து (மட்டியூரிலிருந்து) வடக்கே 8 கி.மீ. தொலைவிலும், சிங்கம்புணரியிலிருந்து வடக்கே 12 கி.மீ. தொலைவிலும், திருச்சிராப்பள்ளி - மதுரை பேருந்துச் சாலையில் உள்ள பள்ளப்பட்டியிலிருந்து கிழக்கே 6 கி.மீ. தொலைவிலும் பொன்னமராவதியிலிருந்து தெற்கே 15 கி.மீ. தொலைவிலும் உள்ளது. மதுரை, புதுக்கோட்டை, திருச்சிராப் பள்ளி, திருப்புத்தூர், பொன்னமராவதி, முதலிய நகரங்களிலிருந்து பேருந்துகளும், சிங்கம் புணரியிலிருந்து நகரப் பேருந்துகளும் பிரான்மலைக்குச் செல்கின்றன. 2450 அடி உயரமுள்ளது இந்தமலை.

**"ஈண்டு நின் றோர்க்கும் தோன்றும் சிறுவரை**
**சென்று நின் றோர்க்கும் தோன்றும்"[1]**

என்று கபிலர் பாடியவாறு நாலாபக்கமும் நெடுந்தொலைவிலுள்ளோர்க்கும் காட்சியளிக்கும் மாட்சியும் உயரமும் கொண்டு விளங்கும்மலை, இந்தப் பிரான்மலை.

**பாண்டிய நாடு**

பாண்டிய நாடு பழமையானது. பண்டு தோன்றியது பாண்டியர்குடி. சேரர்குடியும் சோழர்குடியும் தோன்று வதற்கு முன்பே தோன்றியது பாண்டியர்குடி என்பர் அறிஞர். இப்பாண்டியர் படைப்புக்காலந்தொட்டு மேம் பட்டு வரும் தொல்குடியினரென்பது அறிஞர்களது கொள்கை. இக்குடியினர் எக்காலத்து இப்பாண்டிமண்ட லத்தை ஆட்சிபுரியும் உரிமை எய்தினர் என்றாதல், எவ் வேந்தரால் இதன் ஆட்சி முதன்முதலாகக் கைக்கொள்ளப் பட்ட தென்றாதல் அறிந்து கொள்ளக் கூடவில்லை. ஆகவே, எவரும் ஆராய்ந்து அளந்து காண்டற்கரிய அத் துணைத் தொன்மையுற்ற குடியினர் இன்னோர் என்பது பெறப்படுகிறது"[2] என்பார் அறிஞர் தி.வை. சதாசிவப் பண்டாரத்தார். தெய்வச் சேக்கிழார் பெருமான்,

"பார்மன்னும் தொன்மைப் புகழ்பூண்டது பாண்டி நாடு.[3] என்று பாண்டியநாட்டின் தொன்மையைப் பாராட்டுவார். பாண்டியநாடு செந்தமிழுக்கும் சிவநெறிக் கும் தாயகமாகும். சிவபெருமான் பாண்டியநாட்டைப்பழம் பதியாகவும், உரிமையாகவும் உடையவன் என்பதை,

**"பாண்டி நாடே பழம்பதி யாகவும்**
**பத்திசெய் அடியரைப் பரம்பரத்து ய்ப்பவன்"[4]**

**"தண்ணார் தமிழளிக்கும் தண்பாண்டி நாட்டானை"[5]**

என்றும் மணி வார்த்தைகளால், மாணிக்கவாசக சுவாமி கள் குறிப்பிடுவார்.

பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்னும் பாண்டிய மன்னன் மிகத் தொன்மைக் காலத்தவன். இந்த மன்னனைக் காரிகிழார் என்ற நல்லிசைப் புலவர் பாடிய புறநானூற்றுப் பாடல்,

"பணியியர் அத்தைநின் குடை.யே முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலம் செயற்கே"[6]

என்று பேசுகிறது. "முனிவரால் போற்றி வழிபடப் பெறும் மூன்று திரு நயனத்தையுடைய செல்வராகிய சிவபெருமான் திருக்கோயிலை வலம் வருவதற்கு நின்முடி தாழ்வதாக" என்பது இந்தப்பாடலடிகளின் பொருள். இதனால் பாண்டியநாட்டில் மிகத் தொன்மைக் காலத்திலேயே சிவாலயம்இருந்தது என்பதையும் சிவநெறி தழைத்தோங்கியிருந்தது என்பதையும் அறிகின்றோம். அத்துடன் இம்மன்னன் அவையில் தொல்லாணை நல்லாசிரியன்மார் பலரிருந்து தமிழ் வளர்த்தனர் என்பதைச் சங்க காலப்புலவர் மாங்குடி மருதனார் இயற்றிய மதுரைக்காஞ்சி என்னும் நூல்வழி அறிகின்றோம்.

"பல்சாலை முதுகுடுமியின்
நல்வேள்வித் துறைபோகிய
தொல்லாணை நல்லாசிரியர்
புணர்கூட் டுண்ட புகழ்சால் சிறப்பின்
நிலந்தரு திருவின் நெடியோன் போல்"[7]

என்பது மதுரைக் காஞ்சி.

பாண்டியர்க்குச் சிறப்பு, தமிழால் மட்டுமன்று. மற்றொரு சிறப்பும் அவர்களுக்கு உண்டு என்றுபுறநானூறு பேசுகின்றது. "நெல்லும் நீரும் பொதுவாக எல்லா மன்னர்களுக்கும் எளிமையுடையன. அவற்றையே தாமும் பெற்றிருத்தல் அத்துணைச் சிறப்பன்று என்று கருதிய பாண்டியர், யாரும் பெறுதற்கரிய பொதியமலையிடத்துண்டாகும். மணமுள்ள சந்தனத்தையும் தென்கடலில் திகழும் முத்தையும் பெற்றுப் பெருமிதம் கொண்டு விளங்குகின்றனர். ஒலிக்கின்ற மூவகை முரசுகளுடன் அரசாள்கின்றனர். தமிழ் பொருந்திய மதுரையில் அருள்

பொருந்திய செங்கோல் தாங்கியுள்ளனர்'' என்று புற நானூறு போற்றுகின்றது.

''நெல்லும் நீரும் எல்லார்க்கும் எளியவென
வரைய சாந்தமும் திரைய முத்தமும்
இமிழ்குரல் முரசம் மூன்றுட னாறாம்
தமிழ்கெழு கூடல் தண்கோல் வேந்தே''[8]

என்பதறிக.

கடல் கோளுக்குப் பின்னர்த் தோன்றியது இக்காலத்து மதுரைமாநகரம். பாண்டிய நாட்டுத் தலைநகராகிய இந்த மாநகரம் ஆலவாயண்ணல் திருக்கோயிலை நடுவணாகக் கொண்டு விளங்கும் அழகிய நகரம்.

''மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்
பூவொடு புரையும் சீரூர்; பூவின்
இதழகத் தனைய தெருவம்; இதழகத்து
அரும்பொகுட்டு அனைத்தே அண்ணல் கோயில்''[9]

என்று பரிபாடலின் இணைப்பான பாடல் திரட்டு மதுரை மாநகரின் அமைவழகை அற்புதமாகக் கூறும்.

ஆலவாயண்ணல் ''நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறி நற்கனகக் கிழி தருமிக்கு அருளியதும்''[10] அறுபத்து நான்கு திருவிளையாடல் புரிந்ததும், அன்னை அங்கயற் கண்ணி அருளரசோச்சியதும் மதுரைமாநகரத்திலேயே யாம். தமிழ் மொழியின் முதல் பக்திப்பனுவல்களாக எண்ணப்படும் திருமுருகாற்றுப்படையும், பரிபாடல் தொகுதியும் தோன்றியது மதுரையிலேயே! சைவஞாயிறாகத் தோன்றிய திருஞான சம்பந்த சுவாமிகள் அடியார் குழாத்தொடு போந்து அனல்வாதம், புனல்வாதம் முதலியன நிகழ்த்தி, அயல்வழக்கின்' துறை வென்று திருநீற்றொளி பரப்பியருளிய திருநகரம் மதுரையே! ஊனும் உயிரும் உளமும் உருக்கும் திருவாசகம் அருளிய

மாணிக்கவாசக சுவாமிகளின் அருள் வாழ்வு நிகழ்ந்த மாட்சிமையுடையது மதுரையம்பதியே! மங்கையர்க் கரசியார், குலச்சிறையார், நின்றசீர் நெடுமாறர் ஆகியோர் எழுந்தருளியிருந்து சைவநெறி பரப்பிய தெய்வநகரமும் இதுவே! மூர்த்திநாயனார் வாழ்ந்திருந்து திருநீறு, உருத்திராக்கம், சடைமுடியெனும் மூன்றனையும் துணை யாகக் கொண்டு மும்மையால் உலகாண்ட புண்ணிய நகரமும் இதுவே! ''மும்மைப் புவனங்கள் மிக்கதன்றே அம்மூதூர்'' என்று சேக்கிழார் பெருமான் திருவாய் செழிக்கப் போற்றிய திருநகரம் மதுரை மாநகரமேயாகும். இத்தகு பெருமை வாய்ந்த மதுரையைத் தலைநகராகக் கொண்டு செந்தமிழும் சிவநெறியும் வளர்த்த தெய்வத் தமிழ் நாடு பாண்டிய நாடாகும்.

**பறம்புநாடு-பறம்புமலை**

இத்தகு தொன்மைப் புகழ்வாய்ந்த பாண்டிய நாட்டின் ஒரு பகுதியாகத் திகழ்ந்தது பறம்புநாடு. இந்நாடு தமிழும் தமிழ்நெறியும் வளர்த்த புண்ணிய பூமியாகச் சங்ககாலத் தில் புகழ்பெற்றிருந்தது. இந்தப் பறம்பு நாட்டை கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஆண்டவன் வேளிர்குலத் தலைவனான வேள்பாரி. ஈரத்தாலும் வீரத் தாலும் நேரொப்பார் இல்லாதவன் வேள்பாரி. பறம்பு நாடு பாரியால் பெருமைபெற்றது. அளவால் சிறுநாடா யினும் புகழால் பெருநாடாக விளங்கியது. இப்பறம்பு நாடு பாண்டிய நாட்டகத்தது என்பதை,

**''புரிசைப் புறத்தினில் சேரனும் சோழனும் போர்புரி**
**இரியச் சயங்கொண்ட போழ்தினில் யாமினி**
**ஈங்கிவனைப்**
**பரிசிற்கு நல்ல கவிபாடி னால்வரும் பாக்யமென்றே**
**வரிசைத் தமிழ்புனை பாரியும் பாண்டிய மண்டலமே''**

எனவரும் பாண்டிய மண்டல சதகச் செய்யுளால் அறியலாம். பறம்புநாடு, பறம்புமலையைத் தலைமையிடமாகக் கொண்ட நாடு. இந்நாடு ''பாரிநாடு'' "பறம்பு நாடு'' "பறநாடு'' எனவும், பறம்புமலைச் சுனை ''பனிச்சுனை'' எனவும் பழைய நூல்களில் வழங்கப் பெறுகின்றன. சங்க காலத்து நல்லிசைப் புலவர்களான கபிலர், ஔவையார், மிளைக்கந்தனார், நக்கிரர். புறத்திணை நன்னாகனார், பெருஞ்சித்திரனார், நல்லூர் நத்நத்தனார் முதலியோர் வள்ளல்பாரியையும், பறம்புமலையையும் பாடியுள்ளனர்.

இந்தப் பறம்புமலை இக்காலத்தில் பிரான்மலை என்று வழங்கப் பெறுகிறது. பிரான்மலையின் மேலுள்ள விசுவநாதர் கோயில் கருவறைவடக்குப்புற அடிப்படைச் சுவரில்,

> ''........இந்நாட்டு அறுநூற்றுவனேரிப்பற்றில்
> பாரிசுரமும் இக்களங்களில்''[11]

என்றும் அதே கோயில் கருவறையின் பின்புறம் அடிப்படை முகப்புப்பட்டைத் தொடரில்,

> ''...இந்நாட்டு அறுநூற்றுவனேரிப் பற்றில்
> பாரிசுரமும் இவ்வூர்கள்.......''[12]

என்றும் இரு கலவெட்டுக்கள் காணப் பெறுகின்றன. பாரீச்சுரம் என்பது ஊர் என்று இக்கல்வெட்டுக்கள் உணர்த்தினாலும் பாரியின் பெயரால் அமைக்கப்பெற்ற சிவன் கோயில் என்ற பொருளே பொதுவாக அமைவதாகும். இந்தப் பாரீச்சுரம் அறுநூற்றுவனேரிப் பற்றில் அமைந்திருப்பதாகக் கல்வெட்டுக்கள் குறிக்கின்றன. இதனை ஆராய்ந்த கல்வெட்டாய்வாளர் பேராசிரியர் சி. கோவிந்தராசனார், ''பறம்புமலைக்குத் தென்கிழக்காக வேந்தன்பட்டிக்குச் செல்லும் அடிவாரச்சாலையின் இடையே ஏரிகளுடன் அமைந்த மலைவளம் நிறைந்த பகுதியே அறு

நூற்றுவனேரிப்பற்றென்பதை அங்குள்ள சொக்கநாதர் கோயிற்கல்வெட்டுச் செய்தியால் அறியமுடிந்தது. எனவே அப்பகுதியிலேயே பாரீச்சுரமும் அமைந்திருக்க வேண்டும்' இவற்றையெல்லாம் கொண்டு பாரியின் பறம்புநாடு, பறம்புமலை ஆகியவற்றின் சார்பாகவே பாரீச்சுரமென்னும் பாரியூரும் மக்களாலோ, பிற மன்னராலோ தோற்றுவிக்கப்பட்டிருக்கும் உண்மை புலனாகும்''[13] என்று கூறுவார்.

இனி, இயற்கையமைவாலும் பறம்புமலை இதுவே என நாம் அறியலாம். பறம்புமலை தேன் சொரியும் மலை. ''திணி நெடுங்குன்றம் தேன் சொரியும் மே;''[14] என்பது கபிலரின் புறப்பாட்டு வரி.

''கொடுங்குன்றின் நீள்குடுமி
மேல்தேன் விரும்பும் முடவனைப் போல்''[15]

என்று மாணிக்க வாசகர் அருளிய திருச்சிற்றம்பலக் கோவையார் குறிக்கும். இவ்வாறு பண்டைக்காலம் முதல் தேனுக்குப் புகழ்பெற்று விளங்கியது இந்தமலை. இன்றும் தேன்மிகுதியாகக் கிடைத்து வருவதும் மக்களால் இம் மலைத்தேன் மிகுதியும் விரும்பப்படுவதும் அனைவரும் அறிந்ததாகும். அதுமட்டு மன்றி இங்கு முக்கிய தீர்த்தமாக இக்காலத்தும் விளங்குவது ''தேனாடி'' என்ற பெயரமைந்த தீர்த்தம் என்பதும் கருதத்தக்கது.

நக்கீரனார், ''பாரி தீம்பெரும் பைஞ்சுனை''[19] என்று பறம்புமலைச் சுனையைக் குறிப்பிடுவார். பறம்புமலை தேன் சொரிவதால் அம்மலையிலுள்ள சுனைகளின் குளிர்ந்த நீர் இனிய சுவையுடையது. இதனை மிளைக் கந்தனார் என்னும் சங்க காலப்புலவர், வாயில் வேண்டிப் புக்க கிழவற்குத் தோழி கூறியதாக ஒரு பாடல் மிக அழகாகப் பாடியுள்ளார்.

"வேம்பின் பைங்காய் என் தோழி தரினே
தேம்பூங் கட்டி என்றனிர்! இனியே
பாரி பறம்பின் பனிச்சுனைத் தெண்ணீர்
தைஇத் திங்கள் தண்ணிய தரினும்
வெய்ய உவர்க்கும் என்றனிர்.
ஈய ஆற்றல் அன்பின் பாலே;"[17]

என்று தலைவன்பால் தோழி நகையாடுகின்றாள். இத்தகு இனிமையும் குளுமையும் உள்ள நீர்ச்சுனைகளை இன்றும் இம்மலையில் கண்டும் துய்த்தும் மகிழலாம். இம்மலை பற்றி,

"வான்கண் அற்று அவன் மலையே வானத்து
மீன்கண் அற்று அதன் சுனையே"[18]

என்பார் கபிலர். இவ்வாக்கை மெய்ப்பித்துக் கொண்டு அகலம், நீளம், உயரம்; ஆகியவற்றால் வான்பரப்பைப் போன்று இம்மலை விளங்குவதையும் அவ்வானிடத்துத் தோன்றும் விண்மீன்களைப் போல எண்ணமுடியாத பனி நீர்ச் சுனைகளை இம்மலை தன்னகத்தே கொண்டு விளங்குவதையும் இன்றும் காணலாம்.

"தீஞ்சுளைப் பலவின் பழமூழ்க் கும்மே!"[19]

"பலாஅம் பழுத்த பசும்புண் ணரியல்
வாடை துறக்கும் நாடு"[20]

என்ற கபிலரின் பாடல் வரிகள் பலாப்பழப்பயன் நிறைந்தது பறம்புமலை என்பதை எடுத்துக் கூறுகின்றன. இக்காலத்தும் இம்மலையில் பலாமரங்கள் இயல்பாக வளர்ந்திருத்தலும் பலாப் பழங்கள் மிகுதியாகக் கிடைப்பதும் அறியத்தக்கன.

இம்மலைக்குத் தெற்கே கூத்துப்பாரிப் பொட்டல்" என்று ஓர் இடம்இருக்கிறது. இப்பெயர் கூத்தையும்பாரியையும் தொடர்படுத்தி உணர்த்துவதாய் உள்ளது. வள்ளல்

பாரி வேட்டைக்குச் சென்று திரும்பும் மாலை பொழுதில் இவ்விடத்தில் கூத்து நடைபெற்றது எனவும் இந்நிகழ்ச்சியை இவ்வள்ளல்பாரி கண்டு மகிழ்ந்தான் எனவும் செவி வழிச்செய்தி கூறுகிறது.[21]

பிறமலைக் கள்ளர் எனப்படுபவர் இராமநாதபுரம் மாவட்டம் (பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் மாவட்டம்) பிரான்மலையிலிருந்து மதுரைப் பகுதிக்கு வந்தவர்கள் என்று சொல்லப்படுகிறது. பறமலைக்கள்ளர் என்றழைக்கப் பட்டவர்களே காலப்போக்கில் பிறமலைக் கள்ளர் எனப்பட்டனர் என்றொரு கருத்தும் உண்டு.[22]

பாரிவேட்டை என்ற பெயரில் ஒரு வேட்டை இக் காலத்தும் இந்தப்பகுதியில் ஆண்டு தோறும் நடைபெற்று வருகிறது. இம்மலை சார்ந்த 15 கி.மீ. தொலைவுக்குட் பட்ட எல்லைக்குட்பட்ட கிராமங்களில் வாழும் மக்கள் இந்த வேட்டை நடத்துவதை மரபாகக் கொண்டுள்ளனர். இவ்வாறு வேட்டைக்குச் செல்லும் பிரான்மலை வட்ட கையைச் சேர்ந்த எல்லா ஊர்மக்களும் "மனமொத்தான் ஊருணி" என்னும் குளக்கரையில் நண்பகலில் ஒன்றுகூடிப் பகலுணவும் ஓய்வும் கொள்வதைமரபாகக் கொண்டுள் ளனர். இந்த வேட்டை நிகழ்ச்சி வேள்பாரியின் நினைவையும் புகழையும் இம்மலை வட்டாரத்தில் நிலைபெறுத்திக் கொண்டுள்ளது.

பிரான்மலைப் பகுதியில் உள்ளது ஐந்துநிலை நாடு. இவற்றுள் ஒன்றுக்கு முல்லைமங்கல நாடு என்று பெயர் வழங்குகின்றது. முல்லைக்குத் தேரீந்தவன் வள்ளல் பாரி இப்பகுதி முல்லைக்கொடிகள் நிறைந்த பகுதி. 'முல்லை யென்ற சொல்லை அடைமொழியாகக் கொண்டு இந்த முல்லைமங்கல நாடு, பாரியின் சிறப்புக்குக் கட்டியம் கூறிக் கொண்டிருக்கிறது. இவையெல்லாம் காலதேவனின் கால்பட்டழிந்தன போக எஞ்சிநின்று நெஞ்சை மகிழ் விக்கும் சில சுவடுகளாகும்.

# திருக்கொடுங்குன்றம் - பிரான்மலை பெயர் வரலாறு

## அ) திணிநெடுங்குன்றம் - திருக்கொடுங்குன்றம்

சங்க காலத்தில் வள்ளல் பாரியாண்ட இந்தமலை பறம்புமலை என்று பெரும் பெயர் பெற்றிருந்தது கபிலர் பெருமான், 'பறம்பு' என்றும், ''திணிநெடுங்குன்றம்'' என்றும் இம்மலையைச் சுட்டியுள்ளார். இதனை, கி.பி. ஏழாம் நூற்றாண்டினராகிய திருஞானசம்பந்த சுவாமிகள்' இத்திருத்தலப் பதிகத் திருப்பாடல் ஒவ்வொன்றிலும் 'கொடுங்குன்றம்' என்று குறித்துள்ளார். பாண்டி பதினான்கு திருத்தலங்களில் இரண்டு மட்டும் குன்றங் களாகும். ஒன்று திருப்பரங்குன்றம். மற்றொன்று இந்தத் திருக்கொடுங்குன்றம் 'கொடு' என்றால் வளைவு என்று பொருளாகும். இயல்பாகவே வளைந்தமுகடுடையது இக் குன்றம். ஆதலால் வளைந்த முகடுடையகுன்றம் என்ற பொருளில் திருப்பரங்குன்றத்தினின்றும் வேறுபிரித்துக் காட்டும் வகையில் இப்பறம்பு மலையை ஆன்றோர் 'கொடுங்குன்றம்' என்று வழங்கினர் எனலாம். பாரியது அருமையறியாப் பகைவர் செய்த கொடுமைக்குக் களமாக இக்குன்றம் அமைந்து விட்டதால் 'கொடுங்குன்றம், எனவும் பெயர் பெற்றிருக்கலாம் என்று அருள்நெறித் தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் நயம்படக் கூறுவார்.

''திருக்கொடுங் குன்ற நாதர் கோயில் மண்டபச் சுற்றின் தென்புறச் சுவரில் ''திருநெலக் குன்றமான சுந்தரராசச் சதுர்வேதி மங்கலத்து என்று பெயர் பெற்றிருப்பதும் இவ்வூர், 'சுந்தரராசச் சதுர்வேதிமங்கலம்' என்று இரண்டாம் பராந்தகனாகிய சுந்தரச் சோழன் (கி.பி. 957-970) பெயரால் சதுர்வேதிமங்கலமாகப் பெயர் பெற்றி

ருப்பதும் புலனாகின்றது''[23] என்பார் பேராசிரியர் சி. கோவிந்தராசனார்.

இத்திருக்கோயிலில் உள்ள முதற் குலோத்துங்கசோழன் காலத்துக் (கி.பி. 1070) கல்வெட்டு முதல் கி.பி. 1743 வரையான கல்வெட்டுக்கள் பலவற்றில் 'திருக்கொடுங் குன்றம்' என்றும் இதே பொருள் தரும் 'திருமலை' என்றும் குறிக்கப்பெற்றுள்ளன.

கி.பி. 15 ஆம் நூற்றாண்டினராகிய அருணகிரிநாத சுவாமிகள் தம் திருப்புகழில் ''கொடுந்திண்குன்றம்'' என்று குறிக்கின்றார். இப்பெயர், ''திணிநெடுங்குன்றம்'' என்று கபிலர் குறிப்பதோடு மிக நெருங்கிய தொடர் புடையதாக அமைந்துள்ளது.

எனவே, சங்க காலத்தில் இம்மலையைக் குறித்த ''திணிநெடுங்குன்றம்'' என்பது,

7 ஆம் நூற்றாண்டில் 'கொடுங்குன்றம்' என்றும்
10 ஆம் நூற்றாண்டில் 'திருநெலக்குன்றம்' என்றும்
11 ஆம் நூற்றாண்டு முதல் இன்றுவரை ''திருக் கொடுங்குன்றம்
(திருமலை) என்றும் திருத்தலப்பெயராக வழங்கப் பெற்று வருகிறது.

**ஆ) பறம்புமலை - பிரான்மலை**

சங்ககாலத்தில் இம்மலை 'பறம்பு' என்றும் 'பறம்பு மலை' என்றும், இப்பறம்பின் பெயரே நாட்டுப் பெய ராகப் 'பறம்புநாடு' என்றும் வழங்கியமையை சங்க கால இலக்கியங்களில் காணலாம்.

அகநானூறு 323 ஆம் பாட்டைப் பாடியவர் பற நாட்டுப் பெருங்கொற்றனார் என்னும் புலவர். இவர் பெய ரால் சங்ககாலத்தில் 'புறநாடு' என்றும் வழங்கப்பெற்றது என்றறியப்படுகின்றது. ''யாப்பருங்கலக் காரிகையில் ஒரு

விகற்பச் சிந்தியல் வெண்பாவிற்கு உதாரணமாகக் காட்டிய,

"நறுநீல நெய்தலும் கொட்டியும் தீண்டிப்
பிறநாட்டுப் பெண்டிர் முடிநாறும் பாரி
பற நாட்டுப் பெண்டி ரடி."

என்புழி, பறநாடு என்பது எழுதினர் தவறும் பதிப்பித்தவர் தவறும் ஆகுமென்று கூறி, "அறநாட்டுப் பெண்டிரடி" என்று மோனைக்கியைவது காட்டித் திருத்திப்படித்தாரும் படிப்பித்தாரும் பலராவர். "பறநாட்டுப் பெருங் கொற்றனார்" என்று பெயர் சிறந்த நல்லிசைப்புலவர் ஒருவருண்டென்பது 323-ஆம் அகப்பாட்டால் இக்காலத்துப் போல அக்காலத்துத் தெளிந்ததில்லை"[24] – என்பார் மகாவித்துவான் ரா. இராகவையங்கார். பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையவர்களைத் தலைமையாகக் கொண்டு பதிப்பிக்கப்பெற்றுள்ள "சங்க இலக்கியங்கள்" ஆராய்ச்சிப் பதிப்பிலும் "பறநாட்டுப் பெருங்கொற்றனார்" என்றே பதிப்பிக்கப் பெற்றுள்ளதும் அறியத்தகும்.

'பறநாட்டுப் பெண்டி ரடி' எனும் எடுத்துக் காட்டு வெண்பா, கி. பி. 11 ஆம் நூற்றாண்டினராகிய குணசாகரர் எடுத்துக் காட்டியது. எனவே, இந்த நூற்றாண்டு வரை பறநாடு என்று இந்நாட்டுப் பெயர் வழங்கியிருப்பதை அறியலாம். பறநாடு என்று வழங்கியது போலவே இம்மலை அக்காலத்துப் பறமலை எனவும் வழங்கியதாக வேண்டும்.

"கி.பி. 12 ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டில்" புறமலை நாட்டுக் கொடுங்குன்றம்" என்பது காணப்படுகின்றது. "தண்முறை" என்பது தண்டறை என வழங்குகின்றது. (ஏ. ஆர். சி. 383/1923). இதனால் உகரம் அகரமாதலும் அகரம் உகரமாதலும் பேச்சுவழக்கில் இயல்பு என்பது தெரிகிறது. எனவே, பறமலை என்பது புறமலை என்று

யாகப் பரமக்குடியைக் கொள்ளலாம்''[32] என்பார் அறிஞர் மா. இராசமாணிக்கனார். இது ஆய்வுக்குரிய செய்தி யாகும்.

தமிழகம் சேரநாடு, சோழநாடு, பாண்டியநாடு என மூன்று நாடுகளாகச் சங்க காலத்தில் அமைந்திருந்தது. இந்த மூன்று நாடுகளையும் முடிமன்னர் மூவரும் ஆண்டு வந்தனர். ''அவ்வரசுகளுக்கிடையே எல்லைக்கோடுகள் தெளிவாகவோ, உறுதியாகவோ அல்லது அவ்வாறு ஏற்றுக் கொள்ளப்பட்டதாகவோ இருந்திருக்க முடியாது. மன்னர் ஆண்ட பரப்புக்களின் சரியான வரையறை அவர்களுக்கே தெரியாது. எல்லைத் தகராறுகள் தொடர்ந்து இருந்தன. அரசின் மிகத்தொலைவான எல்லைகளில் இருந்த சட்டத் திற்குப் புறம்பான சில சமுதாய சக்திகளுக்கு அவை பயன் தருவனவாயுமிருந்தன. போக்குவரத்துக் குறைபாட்டால் அக்கால மன்னர்களால் தற்கால முறையில் சட்டத்தின் ஒழுங்கை நிலைநாட்ட இயலவில்லை. ஒழுங்கைநாட்ட விரும்பிய மன்னர்கள் எப்போதும் ஒறுத்தற்போர்களைப் புரிந்த வண்ணமிருக்க வேண்டியதாயிற்று. நாட்டின் சில பகுதிகளில் இருந்த சிற்றரசர்கள் மிகப்பலராயினர். ஒரு கால் சில சிற்றரசர்கள் எல்லைப்புறக் காவலர்களாகவும் இருந்தனர். வேறு சிலர் அடங்காப் பிடாரிகளாகவும் இருந்தனர். சங்ககால அரசியல் முறை மூன்று முடிமன்ன ராட்சியும், பல சிற்றரசர் ஆட்சியும் அடக்கிற்று. இச் சிற்றரசர்கள் தங்களை அடக்குவார் இன்றேல் சுதந்திரம் பெற முயன்றவாறு இருந்தனர்''[33] என்று சங்ககால அரசியல் நிலை குறித்து விளக்குவார் டாக்டர். ந. சுப்ர மணியன். இஃது ஒரு சிறந்த கணிப்பு ஆகும்.

இவ்வாறு ''மூவேந்தர்களாலும் சிற்றரசர்களாலும் ஆளப்பெற்ற சங்ககாலத் தமிழகத்தில் பாண்டியநாடு காவிரியாற்றிற்குத் தெற்கேயும் ஆனைமலைத் தொடருக்

குக் கிழக்கே கிழக்குக் கடற்கரை வரையிலும் தெற்கே குமரிமுனை வரையிலும் பரந்திருந்தது''[34] என்பர் வரலாற்றறிஞர். இக்கருத்தை உடன்படலாம். ஆயினும் வையை யாற்றுக்கும் வடக்கே யிருந்த பாண்டிய நாட்டு நிலப் பகுதியை, பாண்டியர்களின் ஆட்சிக்கு உட்பட்டோ, உட்படாமலோ குறுநில மன்னர் பலர் அக்காலத்து ஆட்சி புரிந்திருந்தனர் என்பதே வரலாற்றுண்மையாகும்.இதனை ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் பாடியுள்ள புறப்பாட்டொன்றால் அறிய முடிகிறது.

ஒரு காலத்தில் சேர, சோழ வேந்தர்களுக்கும் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியனுக்கும் பகை ஏற்பட்டது. அது காரணமாக அவ்விருவரும் ஒருங்கு கூடி இவனோடு பொருதற்கு வந்தனர். அதனை யறிந்ததும் பெருஞ்சின முற்றுப் பூதப் பாண்டியன் கூறிய சூளுரைப் பாட்டு இது:

''மடங்கலிற் சினைஇ மடங்கா வுள்ளத்து
அடங்காத் தானை வேந்தர் உடங்கியைந்து
என்னொடு பொருதும் என்ப; அவரை
ஆர்அமர் அலறத் தாக்கித் தேரொடு
அவர்ப்புறங் காணேன் ஆயின், சிறந்த
பேரமர் உணகண் இவளினும் பிரிக!
அறநிலை திரியா அன்பின் அவையத்துத்
திறனில் ஒருவனை நாட்டி முறைதிரிந்து
மெலிகோல் செய்தேன் ஆகுக; மலிபுகழ்
வையை சூழ்ந்த வளங் கெழு வைப்பிற்
பொய்யா யாணர் மையற் கோமான்
மாவனும் மன்னெயில் ஆந்தையும், உரைசால்
அந்துவஞ் சாத்தனும் ஆதனழிசியும்
வெஞ்சின இயககனும் உளப்படப் பிறரும்
கண்போல் நண்பிற் கேளிரொடு கலந்த

இன்களி மகிழ்நகை இழுக்கியான் ஒன்றோ
மன்பதை காக்கும் நீள்குடிச் சிறந்த
தென்புலம் காவலின் ஒரீஇப் பிறர்
வன்புலம் காவலின் மாறியான் பிறக்கே[35]''

இப்பாடலால், ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் காலத்தில் வையையைச் சூழ்ந்திருந்த சிறு சிறு நிலப்பகுதிகள் அவன் நண்பர்களான மாவன், ஆந்தை, அந்துவஞ் சாத்தன், ஆதனழிசி, இயக்கன் முதலிய குறுநில மன்னர் களின் ஆளுகைக் குட்பட்டிருந்தன என்று தெரிகிறது. எனவே, அக்காலத்துப் பாண்டியர்கள் கொற்கையைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்ததால் வையைப் பகுதியிலும் வையைக்கு வடக்குப் பகுதியிலும் குறுநில மன்னர்களே ஆட்சி செய்தனர் எனலாம்.

கொற்கையில் பழம் பாண்டியர்களின் ஆட்சி கி.மு. 500 முதல் கி.பி. 300 வரை இருந்திருக்கலாம் என்றும், அப்பால் தலைநகர் மதுரைக்கு மாற்றப்பட்டிருக்கலாம் என்று ஒரு கருத்தும், கி. மு. 3 அல்லது 4 ஆவது நூற்றாண் டிலேயே பாண்டியர் கோநகரம் மதுரைக்கு மாற்றப்பட்டு விட்டது என்று ஒரு கருத்துமாக இரு வேறு கருத்துக்கள் வரலாற்றறிஞர் களிடையே.[36] நிலவுகின்றன இவையும் இங்கு எண்ணத்தக்கன.

கொற்கையைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்த செழியன் ஒருவன் கூடல் நகரில் வெற்றிக் களிப்பக் கொண்டாடினான் என அகநானூற்றுப்பாடல் ஒன்று தெரிவிக்கிறது.

''பேரிசைக் கொற்கைப் பொருநன் வென்வேல்
கடும்பகட்டு யானை நெடுந்தேர்ச் செழியன்
மலைபுரை நெடுநகர்க் கூடல் ஆடிய
மலிதரு கம்பலை போல''[37]

என்று அந்த அகப்பாட்டு கூறும். இப்பாடலில் கூறப்படும் செழியன் கொற்கைக்குத் தலைவனாய் இருந்தான் என்பதும் மதுரை மாநகரில் தனது வெற்றிக் களிப்பைக் கொண்டாடினான் என்பதும் இதனால் புலப்படுகின்றன. மேலும் இப்பாடலில் உள்ள ''கூடல் ஆடிய'' என்பதற்குக் 'கூடல் நீடிய'' என்றொரு பாடபேதமும் காணப்படுகிறது. இதனால், கொற்கையிலிருந்து ஆண்ட இப்பாண்டியன், நெடுநகராகிய கூடல் மாநகர் வரை தன் ஆட்சியை-எல்லையை நீட்டித்து விழாக்கொண்டாடினான் என்றும் கருதலாம். இந்தச் செழியன் சிலப்பதிகாரம் பேசும் ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியனா அன்றி வேறொருவனா என்பது புலப்படவில்லை.

ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் மதுரையி லிருந்து ஆட்சி செய்தான் என்று சிலப்பதிகாரம் கூறும் கண்ணகி, தன்கையில் ஒற்றைச் சிலம்புடன் இந்தச் செழியன் அவைக்கு முறையிடச் சென்றபோது கண்ணகி யின் வருகையை இந்தப் பாண்டியனுக்குத் தெரிவித்த வாயிற்காப்போன்,

"வாழி எங் கொற்கை வேந்தே வாழி!"[38]

என்று குறிப்பதாலும், அப்பாண்டியன் முன் வழக்குரைத்த கண்ணகி,

''நற்றிறம் படராக் கொற்கை வேந்தே!''[39]

என்று விளிப்பதாலும் ''கூடல் ஆடிய'' அல்லது ''கூடல் நீடிய'' செழியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனாக இருத்தல் கூடும் என்று கருதவும் இடமுண்டு. இவனுக்கு முன்பே மதுரைமாநகர் நிர்மாணிக்கப்பட்டிருந்ததாயினும் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் காலத்திற்குச் சற்று முந்தியகாலம் வரை பாண்டியர்களின் முக்கிய தலை நகராகக் கொற்கையே விளங்கியது என்று தெரிகிறது.

ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் மறைவுக்குப் பின், கொற்கை நகரத்தில் இளவரசாயிருந்து ஆட்சிபுரிந்து வந்த வெற்றிவேற் செழியனுக்கு, மதுரையில் முடிசூட்டு விழா நடைபெற்றது. இவ்விழா, சேரன் செங்குட்டுவன் கண்ணகியின் படிமம் அமைத்தற்கு இமயத்தினின்றும் கல் கொணர வடநாட்டிற்குச் சென்றிருந்தபோது நடை பெற்றது.

''கொற்கையில் இருந்த வெற்றிவேற் செழியன்
பொற்றொழிற் கொல்லர் ஈரைஞ் ஞாற்றுவர்
ஒருமுலை குறைத்த திருமா பத்தினிக்கு
ஒரு பகல் எல்லை உயிர்ப்பலி யூட்டி
உரைசெல வெறுத்த மதுரை மூதூர்
அரைசு கெடுத்து அலம்வரும் அல்லற் காலைத்
தென்புல மருங்கின் தீதிர் சிறப்பின்
மன்பதை காக்கும் முறைமுதற் கட்டிலின்
நிரைமணிப் புரவி ஓரேழ் பூண்ட
ஒருதனி யாழிக் கடவுள் தேர்மிசைக்
காலைச் செங்கதிர்க் கடவுள் ஏறினன் என
மாலைத் திங்கள் வழியோன் ஏறினன்''[40]

என்பதால் அறியலாம். எனவே, வெற்றிவேற் செழியன் காலம் வரை பாண்டியர்களின் நேரிடையான ஆட்சி, வையையாற்றுப் போக்கின் தென்பகுதியிலேயே இருந்தது என்பதை அறியலாம். பாண்டியர்களின் ஆட்சிக்கு உட்பட்டோ, உட்படாமலோ வையையாற்றுப் போக்கிற்கு வடபகுதியில் குறுநில மன்னர்களின் ஆட்சியே நிலவியது. பிற்காலத்தில் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் வையையாற்றின் வடபகுதியி லிருந்த முத்தூற்றுக் கூற்றத்தையும் மிழலைக் கூற்றத் தையும் வென்று, தன் ஆட்சியோடு இணைத்துக் கொண

டான் என்னும் செய்தியினை 24 ஆம் புறப்பாட்டால் அறிகின்றோம். ஆயினும் இவனால் வையைக்கு வடக்கே யிருந்த பறம்பு நாடு இணைத்துக் கொள்ளப்பட்டதாகச் சங்க கால இலக்கியங்களில் சான்று கிடைக்கவில்லை. ஆதலால், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் காலத்துக்கு முற்பட்டவன் வள்ளல்பாரி எனலாம். எனவே, வையையாற்றுப் போக்கிற்கு வடக்கே வள்ளல் பாரி காலத்தில் பாண்டியராட்சி நேரிடையாக நிலவவில்லை யெனலாம். ஆதலால், வையையாற்றின் தென்கரையில் உள்ள பரமக்குடி-பறம்புக்குடி பறம்பு நாட்டின் தென்னெல்லையாக இருந்த தென்று கொள்ள லாம்.

இவை கொண்டு பறம்புநாட்டின் தென்னெல்லை, பறம்புக்குடிப் பகுதியைத் தன்னகத்துக் கொண்டு, அது முதல் கிழ்மேலோடிய வையையாற்றின் வடகரையை எல்லையாகக் கொண்டு, மதுரையிலிருந்து வடகிழக்கில் ஏறத்தாழ 15. கி.மீ. தொலைவில் உள்ள திருமோகூர் வரை இருந்தது எனக் கொள்ளலாம்.

ஆ) கிழக்கு எல்லை

முத்தூற்றுக் கூற்றம் என்பது சங்ககாலத்தில் பாண்டிய மண்டலத்தின் கிழக்குக் கடற்பகுதியில் அமைந்திருந்தது. 'இது முத்தூர்க் கூற்றம் என்றும் வழங்கப்படுவதுண்டு. 24 ஆம் புறப்பாட்டால் இது பழைய வேளிர்க்குரிய தென்பதும் நெல்விளைவிற் சிறந்தது என்பதும் இனிது புலப்படுகின்றன. "பாண்டியமண்டலத்து முத்தூற்றுச் கூற்றம்" (S.I.I. Vol. VII No,429) என்றும், "முத்தூற்றுக் கூற்றத்துப் பொய்கை நல்லூர்" (S.I.I. Vol. No.1042) என்றும், "முத்தூற்றுக் கூற்றத்துத் திருப்புனவாயில் (S.I.I. Vol. VIII No.210, 213) என்றும், "முத்தூற்றுக் கூற்றத்துத் தித்தானம்" (Ins. No. 599 of 1926-27)

என்றும் கல்வெட்டுக்கள் கூறுவதால் முத்தூற்றுக் கூற்றம் அவ்வூர்களைத் தன்னகத்துக் கொண்டு பாண்டிய மண்டிலத் திலிருந்த ஓர் உள்நாடு என்பது பெறப்படுகின்றது. அவ்வூர்களுள் திருப்புனவாயிலும், பொய்கை நல்லூரும் தஞ்சாவூர் சில்லாவில் (இப்போதைய புதுக்கோட்டை மாவட்டத்தில்) அறந்தாங்கித் தாலுகாவிலும், தித்தாண்ட தானபுரம் என்று வழங்கும் தித்தானம் இராமநாதபுரம் சில்லாவில் திருவாடானைத் தாலு காவிலும் இருத்தலால் இக்கூற்றம் அறந்தாங்கி, திருவாடானைத் தாலுகாக்களில் இருந்திருத்தல் வேண்டும் என்பது ஒருதலை''[41] என்பார் அறிஞர் தி. வை. சதாசிவப் பண்டாரத்தார்.

"நெடுஞ்செழியன் ஆட்சியிற் கிடந்த தென்பாண்டி நாட்டின் கிழ்க்கடற்பகுதியில் முத்தூற்றுக் கூற்றம் என்பது ஒருபகுதி. அதன் தலைநகர் முத்தூறு என்பது. அதற்கும் திருநெல்வேலிக்கும் ஒரு பெருவழி இருந்ததெனத் திருநெல்வேலி நெல்லையப்பர் கோயில் கல்வெட்டொன்று (S.I.I. Vol. V No.436) குறிக்கின்றது. பாண்டிய நாட்டுக் கப்பலூர், சோழராட்சியில் "உலகளந்த சோழ நல்லூர்" என்ற பெயர்தாங்கியிருந்த போது தோன்றிய கல்வெட்டு, அதனை "முத்தூற்றுக் கூற்றத்து உலகளந்த சோழ நல்லூரான கப்பலூர் (A.R. No. 58-1925) என்று கூறுகிறது''[42] என்றும் "உக்கிரப் பெருவழுதி பாண்டி வேந்தனாய் வீற்றிருக்கையில் கிழக்கில் முத்தூற்றுக் கூற்றத்தில் வேங்கை மார்பன் என்னும் குறுநிலத் தலைவன் ஆட்சி செய்து வந்தான்....அந்நாளில் அப்பகுதியிலுள்ள கானப்பேரெயில் சிறந்த அரண் அமைந்து பாண்டியர்க் குரியதாயிருந்தது''[43] என்றும் பேராசிரியர் ஔவை. துரைசாமிப் பிள்ளை கூறுகிறார்.

தேவகோட்டைக்குக் கிழக்கே-10. கி.மீ. தொலைவில் உள்ளது அனுமந்தக்குடி என்னுய ஊர். இங்கு மழநாத

சுவாமி கோயில் என்றழைக்கப்படும் சமணர் கோயில் உள்ளது. இங்குள்ள விசயநகர வேந்தர் காலத்துக் (கி.பி. 1535) கல்வெட்டு ஒன்று முத்தூற்றுக் கூற்றத்துக் குருவழதுடி.....என்னும் ஜினேந்திர மங்கலம்•'[44] என்று குறிப்பிடுகின்றது. தேவகோட்டைக்குக் கிழக்கே முத்துநாடு என்று ஓர் ஊர் உள்ளது. இந்த ஊர் வட்டகை முத்துநாடு என்று இக்காலத்தும் வழங்கப்படுகிறது.பண்டு முத்தூற்றுக் கூற்றம் இருந்ததை முத்துநாடு எனும் பெயர் உறுதிப்படுத்துவதாகும்.

எனவே, முத்துக் கூற்றத்தில் பொய்கை நல்லூர், திருப்புனவாசல், தித்தாண்டதானபுரம், கப்பலூர், காளையார்கோயில், அனுமந்தக்குடி, முத்துநாடு ஆகிய ஊர்கள் இருந்தனவென்று அறிகின்றோம. இவறறுள் அனுமந்தககுடியும், முத்து நாடும் தேவகோட்டைககுக் கிழக்கே மிக அண்மையில் இருக்கும் ஊர்களாகும். எனவே அனுமந்தக்குடிக்கும், முத்து நாட்டுக்கும் மேறகே பறம்பு நாடு இருந்தது என அறிகின்றோம்.

''பறம்புநாடு என்பது பிரம்பூர் நாடு எனவும் மருவி வழங்கிவருகிறது. நகரததார்களில் ஒரு பிரிவாகிய மாற்றூர்க் கோவிலைச் சேர்ந்தவர்கள் தங்கள் திருமணங் களில் எழுதும் இசைவுப்பிடிமானததில் ''கேரளசிங்க வள நாடாகிய பிரம்பூர் நாட்டில்'' எனறு இன்றளவும் எழுதி வருகிறார்கள்''[45] என்று ''சோமலெ'' குறிபபிடுவார். பிரம்பூர் நாட்டில் உள்ளதாகக் குறிக்கப்பெறும் மாறறூர், இலுப்பைக்குடி ஆகிய ஊர்கள காரைக்குடிககுக் கிழக்கே 5 கி.மீ. தொலைவில் அடுத்தடுத்து உள்ளன.

டாக்டர் சுப. திண்ணப்பன், ''பிரம்பூர் என்ற நாட்டின் கீழ் மாற்றூர், இலுப்பைககுடி என்ற இரண்டு கோயில் களும் வருகின்றன. இங்கு பிரம்பூர் என்பது வள்ளல்

பாரியின் பறம்பு என்பதன் திரிபு என்று 'சோமலெ' கருது கின்றார்கள். இப்போதுள்ள பிரான்மலைப் பகுதியைப் பறம்புமலைப் பகுதியாகக் கொண்டால் அதற்கு அண்மை யில் இருக்கும் இளையாற்றங்குடியும் பிரம்பூர் நாட்டில் தான் வரவேண்டும். அதை விடுத்து மாற்றூர், இலுப்பைக்குடி மட்டும் பிரம்பூர் நாட்டின் கீழ் வரு வானேன்?"46 என்றொரு வினா எழுப்பியுள்ளார். நல்ல வினா!

தேவகோட்டைக்குக் கிழக்கே முத்து நாடு என்றோர் ஊரும், அவ்வூர் வட்டகை இன்னும் முத்து நாடு என்று வழங்கப்பெறுகிறது என்றும் முன்னர்க் கண்டோம். பண்டைக்காலத்து முத்தூற்றுக் கூற்றம் பிற்காலத்தில் முத்துநாடு என்று மாறி வழங்குதல் இயல்பு. அனுமந்தக் குடிக்கும் முத்து நாடு என்னும் ஊருக்கும் மேற்கே பறம்பு நாடு அமைந்திருந்தது. முத்து நாட்டுப்பகுதி மக்கள் தம்நாட்டு எல்லையிலிருந்த மாற்றூர், இலுப்பைக்குடி முதலிய ஊர்கள் இருந்த பகுதியை பறம்புநாடு என்று வழங்கினர் எனவும், மாற்றூர், இலுப்பைக்குடி முதலிய ஊர்கள் உள்ள பறம்பு நாட்டுப்பகுதி மக்கள் தம்நாட்டு எல்லையிலிருந்த தேவகோட்டைக்குக் கிழக்கிலிருந்த பகுதியை முத்து நாடு என்று வழங்கினர் என்றும் கொள்ளல் பொருந்தும். இப்படி வழி வழியாக வழங்கப் பெற்றதால் "பிரம்பூர் நாட்டில் மாற்றூர்" என்று மாற்றூர்க் கோயிலைச் சேர்ந்தவர்கள் இடிபிடிமானத்தில் பல நூற்றாண்டுகளாக எழுதி வருகின்றனர் என்றும் கருதுவது பொருத்தமாகும். எனவே 'சோமலெ' கருத்து ஏற்புடையதாகிறது.

இக்காலத்துப் புதுவயல் என்ற ஊருக்கும் மித்திரா வயல் என்ற ஊருக்கும் இடையே பிரம்புவயல் என்றொரு சிற்றூர் உள்ளது. பறம்புவயல் என்ற பெயரே பிரம்புவயல் என மாறி இக்காலத்து வழங்கப் பெறுகிறது எனலாம்.

மாற்றூர், இலுப்பைக்குடி, பறம்புவயல் ஆகிய ஊர்கள் முத்தூற்றுக் கூற்றத்தின் மேற்கே உள்ள அனுமந்தக்குடி முத்து நாடு ஆகிய ஊர்களுக்கு மேற்பகுதியில் அமைந்துள்ளன என்பது அறியத்தக்கது. ஆதலால் பறம்பு நாட்டின் கிழக்கெல்லையாக பறம்புவயல்-பிரம்புவயல் இருந்தது எனலாம்.

**வட வெல்லை**

வள்ளல் பாரியாண்ட பறம்பு நாட்டுக்கு வடக்கிலும் வட கிழக்கிலும் அக்காலத்தில் பாரி தோன்றிய குடியினராகிய எவ்விகுடியினர் தொடர்ந்து ஆட்சிபுரிந்து வந்தனர். எவ்விகுடியினர் ஆண்டுவந்த இந்நிலப்பகுதி மிழலைக் கூற்றம் என்று பெயர் பெற்றிருந்தது.

"பாண்டி மண்டலத்து மிழலைக் கூற்றத்து ஒக்கூர்" (S.I.I. Vol. VIII No. 247) எனவும், "மிழலைக் கூற்றத்து மணமேற்குடி" S.I.I. Vol. VIII No. 448) எனவும் "மிழலைக் கூற்றத்துக் கீழ்க்கூற்றுப் பொன்பற்றி" (S.I.I. Vol. IV No. 372) எனவும், "மிழலைக் கூற்றத்து நடுவிற் கூற்று புல்லுக்குடி" (திருப்புத்தூர்க் கல்வெட்டு 130 of 1908) எனவும் கல்வெட்டுக்களில் வரும் தொடர்களால் இக்கூற்றம் பாண்டிய மண்டலத்தில் இருந்தது என்பதும் இதில் கீழ்க்கூறு, நடுவிற்கூறு, மேற்கூறு என்று மூன்று உட்பிரிவுகள் இருந்தன என்பதும் நன்கறியக் கிடக்கின்றன இக்கூற்றத்திலுள்ள மணமேற்குடி., பொன்பற்றி (பொன்பேத்தி) முதலான ஊர்கள் தஞ்சாவூர் சில்லாவில் அறந்தாங்கித் தாலுகாவிலும் பராந்தகநல்லூர் வாளவர் மாணிக்கம் முதலான ஊர்கள் புதுக்கோட்டை இராச்சியத்தில் திருமெய்யம் தாலுகாவிலும் இருத்தலால், இம் மிழலைக் கூற்றம் அத்தாலுகாக்களிலும் இருந்தது என்பது தேற்றம்"[47] என்றும், "மாணிக்க வாசகப் பெருமானை இறைவன் ஆட்கொண்டருளிய தலமாகிய திருப்பெருந்

துறை மிழலைக் கூற்றத்திலிருந்ததோர் ஊர் என்பது கல்வெட்டுக்களாலும் (Ins. No. 502 and 503 of 1925) பெரும்பற்றப் புலியூர் நம்பியின் திருவிளையாடற் புராணத்தாலும் அறியப்படுகின்றது. அவ்வூர் இக்காலத்தில் ஆவுடையார்கோயில் என்ற பெயரோடு அறந்தாங்கித் தாலுகாவில் வெள்ளாற்றிற்குத் தெற்கே முக்கால் மைல் தூரத்தில் உள்ளது. ஆகவே, பொன்பற்றி (பொன்பேத்தி), மணமேற்குடி, திருப்பெருந்துறை ஒக்கூர் (இது சிவகங்கைக்கு அருகில் உள்ள ஒக்கூரின் வேறானது) ஆகிய ஊர்களைத் தன்னகத்துக் கொண்டு முற்காலத்தில் நிலவிய மிழலைக் கூற்றம் எனப்படுவது சோழமண்டலத்திற்குத் தென்னெல்லையாகவுள்ள வெள்ளாற்றிற்குத் தெற்கும், திருப்புனவாசலுக்கு அண்மையில் கடலொடு கலக்கும் பாம்பாற்றிற்கு வடக்கும் பாண்டி மண்டலத்திலிருந்த ஓர் உள் நாடு என்பது தெள்ளிது'' என்றும், "இம்மிழலைக் கூற்றம் புதுக்கோட்டை நாட்டில் ஒருபகுதியையும் தஞ்சாவூர் ஜில்லா அறந்தாங்கித் தாலுகாவின் தென்பகுதியையும், இராமநாதபுரம் ஜில்லாவில் ஒரு பகுதியையும் தன்பாற் கொண்டு மேற்கூறு, நடுவிற்கூறு, கீழ்க்கூறு என்னும் முப்பிரிவுகளையுடைய பெருநாடாகப் பாண்டி மண்டலத்தின் வடபகுதியில் அமைந்திருந்தது''[43] என்றும் கூறுவார் அறிஞர் தி.வை. சதாசிவப்பண்டாரத்தார்.

மிழலைக் கூற்றம் சங்க காலத்தில் வேள் எவ்விகுடியினர்க்கு உரியதாய் இருந்தது என்பது அறிந்ததே.

"யாழிசை மறுகின் நீடுர் கிழவோன்
வாய்வாள் எவ்வி ஏவல் மேவார்
நெடுமிடல் சாய்த்த பசும்பூண் பொருந்தலர்
அரிமண வாயில் உறத்தூர் ஆங்கண்
கள்ளுடைப் பெருஞ்சோற்று எல்லிமிழ் அன்ன''

என்று பரணர் பாடிய 266 ஆம் அகப்பாட்டு கூறும்

''யாழ் ஒலிக்கும் தெருக்களையுடைய நீடூரின் தலைவனான வாள் வென்றி வாய்ந்த எவ்வி என்பவன் தன் ஏவலை ஏற்றுக் கொள்ளாதவராகிய பசிய பொன்னணியையுடைய பகைவரது பெருவலிமையைக் கெடுத்த அரிமணவாயில். உறத்தூர் ஆகிய ஊர்களில் அவனுடைய படையாளர்க்கு வழங்கிய கள்ளுடன் கூடிய பெருஞ்சோற்றினாலே பகலில் எழுந்த ஆரவாரம்போல'' என்பது இந்தப் பாடலடிகளின் பொருளாகும். இந்த எவ்வி பரணர் காலத்தினன். ஆதலால் வள்ளல் பாரி காலத்திற்கு முந்தியவன் எனலாம்.

இப்பாடலில் ''அரிமண வாயில்'' என்று குறிக்கப் பெறுவது அரிமளம் என்றும் ஊர்[49]'' என்பார் பேராசிரியர் ஒளவை. துரைசாமிப்பிள்ளை. பிற்காலத்தில் உருவான கோனாட்டின் உறத்தூர்க் கூற்றம் இப்பாடல் குறிக்கும் உறத்தூரின் பெயரால் வழங்கப்பெற்றதொரு கூற்றம் எனலாம்.

வேள் எவ்வி குடியில் பிறந்தவன் வேள்பாரி. உறத்தூர் வேள் எவ்வி காலத்தில் மிழலைக் கூற்றத்தின் மேற்கே அமைந்திருந்தது. அப்பகுதியில் வேள் எவ்வியின் ''ஏவல் மேவார்'' இருந்தமையால் வேள் எவ்வி அப்பகைவரின் வலிமையை அடக்கினான். இந்த எவ்விக்குப் பின்வந்த—எவ்வி குடியினனான வேள்பாரி தன்குடியினரின் ஆட்சிக்குட் பட்டிருந்ததும், அடிக்கடி ஏவல்மேவாரின் தொல்லை நிகழ்ந்து கொண்டிருந்துமான உறத்தூர்ப் பகுதியை வேள் எவ்வியின் விருப்பத்தின் வண்ணம் தன் பறம்பு நாட்டோடு இணைத்துக் கொண்டான் என்று கருதலாம். தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ் செழியன் வெற்றி கொண்ட போதிருந்த மிழலைக் கூற்றத் தில் இந்த உறத்தூர்ப்பகுதி, கோனாட்டில் அடங்கி யிருந்ததா என்பது தெரியவில்லை; ''கோனாடு வேள் எவ்வி முன்னர் ஆட்சி புரிந்ததும் இருங்கோவேண்மானுக்

குரியதுமாகிய மிழலைக் கூற்றம்"[50] என்னும் அறிஞர் தி.வை. சதாசிவப்பண்டாரத்தார் கருத்து இதனை அரண் செய்வதறிக.

பறம்புமலைக்கு வடக்கேவிராலிமலை, புதுக்கோட்டைச் சாலையில் பறம்பூர் என்னும் ஓர் ஊர் உள்ளது. பறம்பூர் பறம்பு என்பதோடு தொடர்புடைய பெயராகும். இப் பறம்பூர், வேள்பாரி காலத்திற்குப்பின் கோனாட்டில் அடங்கியதாயிற்று. நெற்குப்பைச் செப்பேடு "கோனாடு பிறாமலை சூழ்ந்த பொன்னமராவதி நாட்டில்" என்ப தால் பிற்காலத்தில் பறம்புமலையும் கோனாட்டில் அடங்கியதாயிற்று என்பதும் ஓர்க. கோயிலில் சுவாமி கோயிலின் தென்புறச்சுவரில்

"தேனார் பொழில்சூழும் தென்பறம்பை வேளாளர்
கோனார் குறிஞ்சியைக் கொண்டளித்தார் - மானேய்
மழுவின் படையானும் மாதுமையும் போதும்
விழவின் படியாக விட்டு"[51]

என்றொரு சாசனப்பாடல் உள்ளது. இந்தப்பாடலில் பறம்பூர் "தென்பறம்பை" என்று சுட்டப்படுகின்றது. இந்தப் பறம்பூர்' வடகோனாட்டின் தென்திசையில் இருப்ப தாலோ, கோனாட்டுத் தலைநகரான கொடும்பாளூருக்குத் தெற்கே இருப்பதாலோ, சோழமண்டலத்திற்குத் தெற்கே 'தென்பறம்பை" என அக்காலத்துக் குறிக்கப்பெற்ற தாகலாம்.

'வேளிர் சிறந்திருந்த ஒளிப்பற்றுடைய குன்று சூழ் நாட்டுப் பறம்பூரும், குடுமியான்மலைப் புறமும் வேள் பாரியிருந்த நாடாகுமோ என்னும் ஐயம் உண்டாவது. இந்நாட்டைச் சாசனங்கள் செயசிங்ககுல கால வள நாடென (புதுக்கோட்டை யிராச்சிய சாசனம் எண்:518)க் கூறுதலான் இது முதலிற் செயசிங்ககுல நாடாயிருந்தது.

பின்னொரு காலத்து இக்குலத்தவரை வென்ற அரசன் செயசிங்ககுல காலனாகி அவன்பெயரால் வழங்கப் பட்டதோ என ஊகிக்கப்படுகின்றது. இந்தச் சிங்ககுல நாடென்னும் வழக்கே நாளடைவில் சிங்கள நாடு எனப் பிழைபடச் சொல்லாகி அப்பிழைத்த வழக்கையே கொண்டு அண்ணாமலை சதகமுடையார் "சிங்கள மெனுந்தேய முழுதாளு மன்னன் சிறந்தபேர்ப் பாரி சாளன்" எனப் பாடினரென்று துணிதல் பொருந்துவ தாகும். இச்சிங்க குலநாடு கொடுங்குன்றமலையுட்படத் தன் தென்னெல்லையையுடையதாய் அக்காலத்திருந்த தெனக் கொள்வது பொருந்தும்"[52] என்பார் மகாவித்து வான் ரா. இராகவையங்கார்.

ஆதலால், பறம்பூரும், குடுமியான் மலைப்பகுதியும் பறம்பு நாட்டில் இருந்தன எனலாம். பறம்புநாட்டின் மேற்கெல்லையாக அமைந்துள்ள வடபறம்பு நாட்டுப் பறம்புக் கண்மாய் (பின்வரும் "மேற்கெல்லை" யெனும் தலைப்பில் வரும் செய்தி பார்க்க.) இருக்குமிடத்திலிருந்து கிழக்கு எல்லையாகிய பறம்புவயல் இருக்குமிடத்துக்கும் நேர் கோடு போட்டுப் பார்த்தால் பறம்புநாட்டுப் பரப்பு ஏறத்தாழச் சம அளவில் அமைவதைக் காணலாம். எனவே, பறம்பு நாட்டின் வடவெல்லை பறம்பூரே என்று கொள்ள லாம். அதுமட்டுமன்றிப் பறம்புநாட்டின் தென்னெல்லை பறம்புக்குடி, கிழக்கெல்லை பறம்பு வயல் மேற்கெல்லை பறம்புக்கண்மாய் என பறம்புஎன்பதோடு தொடர்புடைய பெயர்களாய் அமைவதால் பறம்பூரை வடவெல்லையாகக் கொள்வது பொருத்தமாகும்.

இனி, பறம்புமலைக்குக் கிழக்கே ஒல்லையூர் நாடு இருந்தது என்றறிகின்றோம்.

"ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த
வலவேற் சாத்தன் மாய்ந்த பின்றை
முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே"[53]

என்னும் புறநானூற்றுப் பாடலால் இந்நாடு இருந்தது அறியப்படுகின்றது. இஃது ஒரு சிறு நாடு. இது பிற்காலத்தில் ஒல்லையூர்க் கூற்றமாக இருந்தது என்று கல்வெட்டுக்களால் அறியப்படுகின்றது. "திருமயம் வட்டத்தில் உள்ள ஒளியமங்கலம் என்ற ஊர் முற்காலத்தில் ஒல்லையூர் மங்கலம் என்ற பெயருடையதாயிருந்தது என்பது அவ்வூரிலுள்ள வரகுணீசுவரர் கோயிற் கல்வெட்டால் தெரிகிறது. அக்கல்வெட்டு "கோனாடான கடலடையா திலங்கை கொண்ட சோழவள நாட்டு ஒல்லையூர்க் கூற்றத்து ஒல்லையூர் மங்கலத்து உடையார் வரகுணீசுவர முடைய நாயனார் கோயில் (புதுக்கோட்டை இராச்சியச் சாசனங்கள் எண். 345) என்று கூறுகின்றது. எனவே, ஒல்லையூர் மங்கலத்தைத் தலைநகராகக் கொண்டது ஒல்லையூர்க் கூற்றமாகும். இக்கூற்றமே சங்கநாளில் ஒல்லையூர் நாடென்று வழங்கியதாகும்."[54] என்பார் அறிஞர் திரு.வை. சதாசிவப் பண்டாரத்தார்.

இந்த ஒல்லையூர் நாட்டுக்குரியவனான ஒல்லையூர் கிழான் மதன் பெருஞ்சாத்தன், வேள் பாரி காலத்திற்கு முற்பட்ட காலத்தினன் என்பது ஆய்வாளர் கருத்து.[55] இந்தப் பெருஞ்சாத்தனுக்குப் பின் அவன் வழியினர் எவரும் இந்நாட்டை ஆண்டதாகத் தெரியவில்லை ஆதலால், ஒல்லையூர் நாடு பெருஞ்சாத்தனுக்குப்பிற்காலத்தவனெனக் கருதப்பெறும் வேள்பாரியின் ஆட்சிக்குட்பட்டிருந்ததெனக் கருதலாம்.

பறம்புமலைக்கு கிழக்கே 4.கி.மீ. தொலைவில் ஒளியமங்கலம் உள்ளது. முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே" என்ற புறநானூற்றுத் தொடரால் ஒல்லையூர் நாட்டில் முல்லை நிறைந்திருந்தது என்பதும் தெரிகிறது. முல்லைக்குத் தேரீந்த வள்ளல்பாரியின் பறம்புமலைப் பகுதி முல்லை நிறைந்த நிலப்பகுதி. இப்பகுதியே இக்

காலத்தில் முல்லைமங்கலநாடு என வழங்கப்படுவதும் எண்ணத்தக்கது. எனவே, ஒல்லையூர் நாடு என முற்காலத்தில் வழங்கப்பட்ட நாடு பறம்புநாடாக இருந்ததெனலாம்.

''ஒல்லையூர்க் கூற்றத்து இடையாற்றூர்''[56] எனவும் ''ஒல்லையூர்க் கூற்றத்து வேள் கூறாப் பச்செறிச்சின் மலை''[57] எனவும் காணப்பெறும் கல்வெட்டுத் தொடர்களால் திருமயம் வட்டத்தில் உள்ள இடையாற்றூரும், பச்செறிச்சின் மலையும் ஒல்லையூர் நாட்டைச் சேர்ந்தவை என்பது அறியலாகும். பச்செறிச்சின்மலை இக்கல்வெட்டுள்ள பூலாங்குறிச்சி மலையையே குறிக்கும் என்பர்.[58] இடையாற்றூர் பூலாங்குறிச்சிக்கு வடக்கே ஏறத்தாழ 15 கி.மீ. தொலைவில் உள்ளது. எனவே, பூலாங்குறிச்சிமலை, இடையாற்றூர் இவற்றைத் தன்னகத்துக் கொண்டு பறம்புநாடு விளங்கியதாகலாம்.

திருப்புத்தூர்க் கல்வெட்டு, ''பிராய்மலைச் சீர்மையில் பூங்குன்ற நாட்டில்'' என்று குறிக்கின்றது. புதுக்கோட்டை நாட்டுச் சாசனம் எண்: 588, பூங்குன்ற நாட்டுப் பூங்குன்றமும்'' என்று குறிக்கிறது. எனவே, பூங்குன்ற நாட்டின் தலைநகர் பூங்குன்றம் எனத் தெரிகிறது. இந்நாளில் மகிபாலன்பட்டி என வழங்கும் ஊரே, பூங்குன்றம் என்றும் இவ்வூரினரே சங்ககாலப் புலவரான கணியன் பூங்குன்றனார் என்றும் அறிஞர் கூறுவர். இந்தப் பூங்குன்ற நாடு இந்நாளில் 24½ கிராமங்களைக் கொண்டுள்ளது. 13 ஆம் நூற்றாண்டுத் திருப்புத்தூர்க் கல்வெட்டில் ''பூங்குன்ற நாட்டு நங்காணிப்பற்றாய்'' என்று குறிப்பதால் 12 அல்லது 13 ஆம் நூற்றாண்டில் பிரான்மலைச் சீமையகத்து உருவானதொரு நாடு பூங்குன்ற நாடெனக் கருதலாம் சங்ககாலத்தில் பூங்குன்றம் எனும் ஊர் இருந்திருக்கலாம். ''பிராய்மலைச் சீர்மையில் பூங்குன்ற நாட்டில்''எனும் மேலே காட்டியகல்வெட்டுத் தொடர் இதனை

உணர்த்துவதாகும். ஆக, 24½ கிராமங்கள் அடங்கிய இற்றை நாள் பூங்குன்ற நாடுமுழுவதும் பறம்பு நாடாக விளங்கியதாகலாம்.

பூலாங்குறிச்சிக்குக் கிழக்கேயுள்ள திருக்கோளக்குடி பூங்குன்ற நாட்டுக் கிராமங்களில் ஒன்று; பூங்குன்ற நாட்டின் வடவெல்லையில் உள்ளது. திருக் கோளக் குடிக்குத் தென்கிழக்கே ஏறக்குறைய 20 கி.மீ. தொலைவில் கோனாபட்டு என்ற ஊர் உள்ளது. கோனாட்டுப் பற்று என்பது நாளடைவில் கோனாபட்டு என மாறியிருக்கலாம் எனவும், இவ்வூர் கோனாட்டைச் சேர்ந்த ஊர் எனவும் ஊகிக்கலாம். கோனாபட்டுக்குக் கிழக்கே கானாடுகாத் தான் என்று ஓர் ஊர் உள்ளது. மிழலைக் கூற்றமே கானாடாகியது என்பார்[59] நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார். எனவே, கானாடு காத்தான் மிழலைக் கூற்றத்தைச் சேர்ந்தது எனக் கொள்ளலாம். மிழலைக் கூற்றத்து அரிமண வாயில் என்னும் அரிமணம் கானாடு காத்தானுக்குக் கிழக்கே அமைந்துள்ளதால் இது உறுதிப் படும். இவ்வூர்களைத் தொடர்புபடுத்திச் சிந்தித்தால் கோனாபட்டு, கானாடுகாத்தான் ஆகிய ஊர்களுக்குத் தென்பகுதியில் பறம்புநாடு இருந்தது என்று கருதுதல் பொருந்தும்.

ஆக, வடக்கே பறம்பூர் - குடுமியான் மலைப்புறம், இடையாற்றூர், பூலாங்குறிச்சி, திருக்கோளக்குடி ஆகியவற்றைத் தன்னகத்துக் கொண்டு கோனாபட்டு, கானாடு காத்தான் ஆகிய ஊர்களுக்குத் தென்பால் அமைந்தது பறம்பு நாட்டின் வடவெல்லை என்று உறுதி செய்யலாம்.

**மேற்கெல்லை**

பத்துப்பாட்டுள் ஒன்றாகிய மலைபடு கடாம் என்னும் கூத்தராற்றுப்படையை இயற்றியவர் இரணிய

முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் என்னும் புலவர் பெருமான் இவர் இரணிய முட்டத்துப் பெருங் குன்றூர் என்னும் ஊரினர் என்பர் "மதுரைக்கு ஆறுகல் தொலைவிலுள்ள யானைமலைப்பகுதி, அழகர் மலைப் பகுதி இவ்விரண்டிற்கும் இடைப்பட்ட நிலப்பகுதி இரணிய முட்டம் என்று பெயர் பெற்றது (630 of 190, 5276, 282 of 1929-30)பத்துப்பாட்டு மூன்றாம் பதிப்பு - கழகம்). அப்பகுதியில் பெருங்குன்றுகளும் சிறுகுன்றுகளும் இருப் பதை இன்றும் காணலாம்"[60] அழகர் கோவில் கல்வெட்டுக் கள் பாண்டியர், விசயநகர வேந்தர் காலத்தன.அவை, கீழ் இரணிய முட்டத்துத் திருமாலிருஞ் சோலை"[61] என்று குறிக்கின்றன. (276 of 1929-30, 4 of 19 31-32)"இரணிய முட்டம் என்பது மதுரையை அடுத்த யானைமலை,அழகர் மலைப்பகுதிகளைத் தன்னகத்தே கொண்ட நாடு என்பது கல்வெட்டுக்களால் அறியப்படுகிறது (65, 630 of 1905, 4 of 1931-32, 272, 276, 282 of 1929-30) இரணியமுட்ட நாடு நத்தம் மலைகளைத்தன்னத்தே கொண்டது"[62] என்பன அறிஞர் மா. இராசமாணிக்கனார் கருத்து.

மேலும், யானைமலையில் உள்ள நரசிங்கப்பெருமாள் கோயிலில் முதற்பராந்தக சோழனின் முப்பத்துமூன்றாம் ஆண்டுக் (கி பி 939) கல்வெட்டில் "கிழிரணிய முட்டத்துப் படும் பிரமதேயம் நரசிங்க மங்கலத்து சவையெலாம்"[36] என்று காணப் பெறுகிறது. இக்கல் வெட்டால் நரசிங்க மங்கலம் என்பதும் இரணியமுட்டநாட்டகத்தது என்றறியப் படும். மேலூருக்கும் மேற்கே மதுரை செல்லும் பேருந்துச் சாலையில் நரசிங்கம்பட்டி என்று ஓர் ஊர் உள்ளது. இந்த நரசிங்கம் பட்டி. கல்வெட்டில் குறிக்கப் பெற்றுள்ள நரசிங்க மங்கலம் என்பதோடு நெருங்கிய தொடர்புடைய பெயராக உள்ளது. ஆதலால்,இந்த நரசிங்கம் பட்டி வரை

கிழிரணிய முட்ட நாடு இருந்தது என்றும் நரசிங்கம் பட்டிக்குக் கிழக்கே பறம்புநாடு இருந்தது என்றும் அறியலாம்.

"மதுரை மாவட்டம் மேலூருக்கருகில் உள்ள மேல வளவு என்னும் ஊருக்கு மேற்கேயுள்ள சோம கிரிமலை, முறிமலை என்ற இருமலைகளுக் கிடையே பெரிய கரை யுடைய பறம்புக் கண்மாய் இருக்கிறது. இக்கண்மாயில் உள்ள கலிங்கிற்கு அருகே பாறை ஒன்றில் சுந்தர பாண்டியன் (கி. பி. 1216-1239) காலத்துக் கல் வெட் டொன்று மேலூர் அரசினர் கலைக்கல்லூரி வரலாற்றுத் துறைப் பேராசிரியர் திரு. கணபதி அவர்களால் அண்மையில் கண்டறியப் பெற்றுள்ளது" என்றும் அக்கல் வெட்டு,

> "ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் சோணாடு
> கொண்டருளிய ஸ்ரீசுந்தர பாண்டிய தேவர்க்கயா
> ......தின் எதிராமாண்டு அழகர் திரு விடை
> ......ம் வரபரப்பு நாட்டு பறம்பான திருநாராயண
> ......ங்கலத்து குளம் கரையும் வளர்ந்து வயல் நீர்க்
> கு ஈடுபடாமற் பாறைமேலே நீரும் ஏறக்கண்டு கரைகு
> ......யாமற் கல்லும் படுப்பித்து கலிங்கும் நாட்டுவி
> ......கோவூருடையான் ஆள்வான் ச
> க்கரக்கையான் ஸ்வஸ்தி ஸ்ரீ"

என்றும் எழுத்துக் காட்டி உள்ளார் மதுரை திரு. தே கோபாலன் அவர்கள்.[64] இக்கல்வெட்டு பறம்பு நாட்டு மேற்கு எல்லையை நிர்ணயித்தற்கு அரிய தொரு சான் றாகும். ஆயினும் திரு. தே. கோபாலன் அவர்கள், இக்கல் வெட்டினைக் கொண்டு இந்தஇடம் பறம்பு நாட்டுத் தலை நகராக இருந்திருத்தல் கூடும் என்று முடிவெடுத்திருக் கிறார். "வடபறம்பு நாட்டுப் பறம்பு" என்று இக்கல் வெட்டுக்குறிப்பது தென்பறம்பு நாட்டுப் பகுதியினின்றும்

வடபறம்பு நாட்டின் தென்பகுதியைப் பிரித்துக் காட்டவே என்பதே சரியான முடிவாக இருத்தல் கூடும். கருத்து வேறுபாடு இருப்பினும் இந்த அரிய கல்வெட்டினை எடுத்துக் காட்டி, ஆய்வு செய்துள்ள திரு. கோபாலன் அவர்களுக்கு நம் நன்றிக் கடப்பாடு.

பறம்பு நாட்டின் தென் மேற்கு எல்லையில் தென் பறம்பு நாட்டுத் திரு மோகூரும், திருவாதவூரும், நல்லணி ஆமூரும் இவற்றுக்கு நேர்வடக்கே வடபறம்பு நாட்டுப் பறம்புக் கண்மாயும் இருப்பதைத் தொடர்பு படுத்திப் பார்த்தால் இப்பறம்புக்கண்மாய் பறம்புநாட்டின் மேற் கெல்லையாக அமைந்திருந்தது என்பது தெளிவாகும்.

இந்தப்பறம்புக் கண்மாய்க்கும் வடக்கேயுள்ளது கொட்டாம்பட்டி. புலவர் கா. கோவிந்தன், ''இப்பக்கத்துக் கொட்டாம்பட்டி மலைப்பகுதியைச் சேர்ந்த கூற்றம் பிரமநாடு என்ற பெயரான் இன்றும் வழங்குகின்றது. ஈண்டுக் கூறிய புறமலை நாட்டைப் பறமலை நாடு என்பதன் மரூஉவாகவும், பிரம நாடு என்பதைப் பறம்பு நாடு என்பதன் திரிபாகவும் கோடல் பொருந்தும்''[65] என்று குறிப்பிடுவார். ஆதலால், பறம்புக்கண்மாய்க்கும் வடக்கேயுள்ள கொட்டாம்பட்டிப் பகுதியும் பறம்பு நாடாக இருந்தது என்பது தெளிவு.

இது காறும் கூறியவாற்றால் பறம்புநாட்டின் மேற் கெல்லை திருமோகூர், நரசிங்கம்பட்டி, பறம்புக்கண்மாய் என்று அமைந்து அழகர்மலையின் அடிவாரத்தையொட்டி நீண்டு வடக்கே நத்தம் மலைகளுக்குக்கிழக்குப் பகுதியை எல்லையாகக் கொண்டு, துவரங்குறிச்சி, மருங்காபுரிப் பகுதிகளைத் தன்னகத்துக் கொண்டு வடக்கே பறம்பூர் வரை இருந்தது எனக் கொள்வது பொருந்தும்.

**முடிவுரை**

ஆக, பறம்புநாட்டு எல்லை ஏறத்தாழ அடியிற்

காணும் வண்ணம் அமைந்திருந்தது என்று உறுதியாகக் கொள்ளலாம். இவ்வெல்லையமைந்த பரப்பில் முந்நாறு ஊர்களைத் தன்னகத்துக்கொண்டு பறம்புநாடு முற்காலத்தில் திகழ்ந்திருந்தது.

தென்னெல்லை: திருமோகூர் - கீழ் மேலோடிய வைகை யாற்றங்கரை – **பறம்புக்குடி**

கிழக்கெல்லை: பறம்புக்குடி – காளையார் கோயில் – முத்துநாடு – அனுமந்தக்குடி – **பறம்பு வயல்**

வடவெல்லை: பறம்புவயல் – கானாடு காத்தான் – கோனாபட்டு - திருக்கோளக்குடி – பூலாங்குறிச்சி – இடையாற்றூர் – குடுமியான் மலைப்புறம் – **பறம்பூர்**

மேற்கெல்லை: பறம்பூர் - மருங்காபுரி – துவரங் குறிச்சி – நந்தம் மலைகளின் கிழக்குப் பகுதி - அழகர்மலைக் கிழக்குப் பகுதி – **பறம்புக்கண்மாய்** – திருமோகூர்.

தெற்கே பறம்புக்குடி, கிழக்கே பறம்புவயல், வடக்கே பறம்பூர், மேற்கே பறம்புக்கண்மாய் எனப் பறம்பு என்பதன் தொடர்பான பெயருடைய இடங்களே எல்லையாக உள்ளன என்பது பொருத்தப்பாடுடைய அமைவாகும். புதிய சான்றுகள் கிடைத்தால் இவ்வெல்லையளவில் சற்றுக் கூடுதல் குறைவு காணப்படலாமேயன்றி பேரளவு இருத்தற்கியலாது எனலாம்.

## குறிப்புகள்

1. புறநானூறு 114: 1-2.
2. பாண்டியர் வரலாறு. தி.வை. சதாசிவப்பண்டாரத்தார். பக். 2.

3. பெரியபுராணம். மூர்த்திநாயனார். பா. 1.
4. திருவாசகம்-கீர்த்தித் திருவகவல் 18-19.
5. மேற்படி-திருவம்மானை-10:3.
6. புறநானூறு 6: 17-18.
7. மதுரைக் காஞ்சி 759-763.
8. புறநானூறு 58: 10-13.
9. பரிபாடல் இணைப்புத்திரட்டு 7: 1-4.
10. திருநாவுக்கரசு சுவாமிகள், திருப்புத்தூர்த் திருத் தாண்டகம். 3.
11. பிரான்மலைக் கல்வெட்டுக்கள்-சி. கோவிந்தராசனார் கையெழுத்துப்படி கல்வெட்டு எண். 6.
12. மேற்படி - கல்வெட்டு எண். 7.
13. பறம்பு நாட்டில் பாரீச்சுரம்-இ. கோவிந்தனார். இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம். ஐந்தாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை. 1973. பக். 128-129.
14. புறநானூறு 109: 8.
15. திருக்கோவையார். பா. 150.
16. அகநானூறு 78: 22-23.
17. குறுந்தொகை. 196.
18. புறநானூறு. 109: 9-10.
19. மேற்படி 109: 5.
20. பதிற்றுப்பத்து. ஏழாம்பத்து 1 - 2.
21. புலவர் துரைசாமி (வாணன்) கிருங்காக்கோட்டை
22. மதுரை மாவட்டம்-'சோமலெ'-பக். 65.
23. பிரான்மலைக் கல்வெட்டுக்கள்-இ.கோவிந்தராசனார் கையெழுத்துப்படி-பிற்சேர்க்கை. பக். 3.
24. பாரிகாதை. முகவுரை. மகாவித்துவான் ரா. இராகவையங்கார் பக் 10-11.
25. பத்துப்பாட்டு ஆராய்ச்சி-டாக்டர் மா. இராச மாணிக்கனார். பக். 412-413.

26. நெற்குப்பைச் செப்பேடுகள்-மா. செந்தில் செல்வக் குமரன் எம்.ஏ., கல்வெட்டு-காலாண்டிதழ் 20.பக் 21.
27. பிரான்மலைக் கல்வெட்டுக்கள். சி. கோவிந்தராசனார் கையெழுத்துப்படி கல்வெட்டு எண். 17.
28. S.I.I. Vol. VIII No. 423 hs No. 17 of 1931-32.
29. 329 of 1918
30. S. I.I. Vol VIII No. 423.
31. "ஆமூர் அய்யப்பொழில் ஈஸ்வரம்" கோ. அர்ச்சுனன் எம்.ஏ., தொல்லியல் ஆய்வுத் தொகுதி. பக். 178.
32. பத்துப்பாட்டு ஆராய்ச்சி. டாக்டர் மா. இராச மாணிக்கனார். பக். 411.
33. சங்க கால வாழ்வியல் - டாக்டர் ந. சுப்ரமண்யன். பக். 43-44.
34. மேற்படி. பக். 44.
35. புறநானூறு. 71.
36. கோநகர் கொற்கை. அ. இராகவன். பக். 142.
37. அகநானூறு. 296: 10-13.
38. சிலப்பதிகாரம் 20: 30.
39. மேற்படி 20: 66.
40. மேற்படி 27: 127-138.
41. புறநானூற்றுச் சொற்பொழிவுகள். புறநானூறும் கல்வெட்டுக்களும். தி.வை. சதாசிவப்பண்டாரத்தார். பக். 126-127.
42. வரலாற்றுக் காட்சிகள். ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை. பக். 66.
43. பண்டைநாளையச் சேரர் வரலாறு. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை. பக். 29.
44. "பாண்டியநாட்டில் சமண சமயம்"-வெ. வேதாசலம் 'கல்வெட்டு'-காலாண்டிதழ். 13.
45. செட்டிநாடும் செந்தமிழும்-'சோம லெ'. பக். 34.

46. மேற்படி. பக். 551.
47. புறநானூற்றுச் சொற்பொழிவுகள்-புறநானூறும் கல்வெட்டுக்களும். தி.வை. சதாசிவப்பண்டாரத்தார். பக். 126.
48. கல்வெட்டுக்களால் அறியப்பெறும் உண்மைகள். தி.வை. சதாசிவப்பண்டாரத்தார். பக், 43-44.
49. பண்டைநாளையச் சேரமன்னர் வரலாறு. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை பக். 141.
50. பாண்டியர் வரலாறு - தி. வை. சதாசிவப் பண்டாரத்தார். ப. 24.
51. புதுக்கோட்டை சாசனப்பாடல். 1115.
52. பாரிகாதை. முகவுரை-மகாவித்துவான் ரா. இராகவையங்கார். பக். 25.
53. புறநானூறு. 242: 4-6.
54. புறநானூற்றுச் சொற்பொழிவுகள். புறநானூறும் கல்வெட்டுக்களும். தி.வை. சதாசிவப்பண்டாரத்தார். பக். 124-125.
55. சங்க கால மன்னர் காலநிலை வரலாறு. V.P. புருஷோத்தம். பக். 311 R 313.
56. ஆவணம்-அரையாண்டிதழ். I. டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றுமையம். பக். 39.
57. மேற்படி பக். 69.
58. மேற்படி பக். 60.
59. கள்ளர் சரித்திரம்-நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார். பக். 30
60. பத்துப்பாட்டு ஆராய்ச்சி. டாக்டர் மா. இராசமாணிக்கனார். பக். 354.
61. மேற்படி. பக். 338.
62. மேற்படி. பக். 740.
63. S.I I. Vol III Part III No. 106.
64. பறம்புக்கண்மாய்க் கல்வெட்டு-தே கோபாலன். தொல்லியல் ஆய்வுத் தொகுதி. பக். 18.
65. சங்க கால அரசர் வரிசை III. புலவர். கா.கோவிந்தன். பக். 52.

# பறம்பு நாட்டு வளம்

வள்ளல் பாரி வாழ்ந்திருந்த பறம்புமலை—வளங் கொழிக்கும் மலையாக—வள்ளல் பாரியின் வளம் நிறைந்த மனம் போல இயற்கை வளத்தை அள்ளித்தரும் மலையாக இருந்தது. பலாவும், மாவும், வாழையும், மாதுளையும், பருவமல்லாது பயன் வழங்கின. வேங்கையும் நாகமும் பூத்து நிறைந்து தாங்காமல் முற்றிய செந்நெற் பயிர் போல் தலை தாழ்ந்திருக்கும். குரவம், புன்னை, ஆரம் முதலிய மரங்கள் பருத்து ஓங்கி வானத்தை இடிப்பது போல வளர்ந்திருக்கும். பறம்புமலையில் வாழும் குறத்தியர் காய்ந்த சந்தனக் கட்டைகளையே அடுப்புக்கு விறகாக எரிப்பர், அவ்வாறு குறத்தியர் எரிக்கும் போது எழும்புகை பொன்போல் மலர்ந்திருக்கும் வேங்கைமரக் கிளை களினூடே படர்ந்து மணம் வீசும், மழைக்காலத்தின் மாலைப் பொழுதில் காட்டுப்பூனை சிரித்தால் போன்ற முல்லையின் பசிய அரும்புகள் முறுக்குடைந்து மணம் வீசும். பூஞ்சோலைகளில் மயில்கள் தோகைகளை விரித்து விறலியர் போல் ஆடும். கார்காலம் கழிந்ததும் பொன்னை மெருகிட்டது போல அழகிய காட்சி பல நல்கும். அப்போது களிற்றின் முகத்திலுள்ள புகரைப் போலத் தெறும் மலர்கள் மலர்ந்திருக்கும். வயல் நிறையப் புதல்பூக்கள் பூத்திருக்கும்.

பசுக்கள் கூட்டம் மேயுமாறு புல் வெளிகள் பரந்திருக்கும் மலைச்சாரலில் மான்கள் துள்ளித் திரிந்து விளையாடும். குரங்கினம் வான்முட்ட ஓங்கி வர்ந்துள்ள மூங்கில்களில் தாவிப் பாய்ந்து மகிழும். நெடிய சிகரம் தோறும் அருவிகள் முழங்கும்.

மூங்கில் நெல், சுவைமிகுந்த பலாப் பழம், வள்ளிக் கிழங்கு, தேன் ஆகிய நான்கு உணவுப் பண்டங்கள்

உழவர் உழுது பயிரிடாமலே கிடைக்கும் இயல்புடையது பறம்புமலை.

இப்பறம்பு நாட்டுப் புன்செய் நிலங்களும் நிறைந்த பயன் வழங்கின. அண்மையில் ஈன்ற பெண் மயிலைப் போல் வரகுப்பயிர் கரியதண்டு நீண்டு அதன் அடியிலிருந்து முடிவரை கதிர் விரித்து விளைந்திருக்கும். தினைக்கதிர்கள் கொடுவாளைப் போல் வளைந்து முதிர்ந்திருக்கும். எள்ளின் இளங்காய்கள் முற்றிக் கறுத்திருக்கும். அவரைக் கொடி களிலே குலைகுலையாய்க் காய்கள் காய்த்திருக்கும்

பறம்பு நாட்டில் உள்ள புல்வேய்ந்த சிறிய குடிசை தோறும் வாழும் மக்கள் வருவோர்க் கெல்லாம் மதுவை உண்ணக் கொடுப்பர். நெய்யீலே கடலையை வறுத்துக் சோறு சமைத்து உண்பர்.

பறமபு மலையில் உள்ள சுனைகளில்பூந்த நீலமலர்களில் தேன், மழையில்லாக் காலத்திலும் அருவியாக வழிந்து கொள்ளுப் பயிருக்கு உழுத நிலத்தினூடே பாய்ந்து ஓடும். பறம்புமலை வானளாவிய உயரமும் அகலமும் உடையது. மலையில் உள்ள எண்ணற்ற சுனைகள் விண்மீன்களைப் போல விளங்கும்.

இவ்வாறு சங்ககால இலக்கியங்கள் பறம்பின் இயற்கை வளங்களைச் சொல்லோவியமாக்கியுள்ளன. இத்தரு அழகும் வளமும் பொருந்தியிருந்த பறம்புமலையைப் போல இளமகள் ஒருத்தி, பெருங்கவினெய்தின அரிய காவலை யுடையவளாயுள்ளாள் என்று செந்நாப்புலவர் கபிலர் பாடிய பாடற்பகுதி நினைந்து இன்புறத் தக்கது.

''... ..ஒள்ளிழைக் குறுமகள்
பேரிசை உருமொடு மாரி முற்றிய
பல்குடைக் கள்ளின் வண்மகிழ் பாரி

பலவுறு குன்றம் போலப்
பெருங்கலின் எய்திய அருங்காப்பினளே!
(நற்றிணை.253)

என்பது அந்தப் பாடற்பகுதி.

இப்பறம்பு மலை இக்காலத்து வளங்குன்றியிருக்கிறது. இதனை வளப்படுத்தி, வள்ளல் காலத்துப் பறம்புமலை போல் திகழ்ந்திடச் செய்தல் தமிழக மக்களின் கடமையாகும்.

---

# வள்ளல் பாரி வரலாறு

மைம்மீன் புகையினும் தூமம் தோன்றினும் தென் திசை மருங்கில் வெள்ளியோடினும் நிலைதிரியாதது, வளங் குறையாதது எனப் புகழப்பட்ட பறம்புமலையிலிருந்து பறம்புநாட்டை முறைபிறழாது ஆண்டுவந்தான் வேள்பாரி. அதனால் அந்நாட்டில் சான்றோர் பல்கினர். மழை பிழைப் பின்றிப் பெய்தது.

"கோஒல் செம்மையின் சான்றோர் பல்கிப்
பெயல்பிழைப் பறியாப் புன்புலத் ததுவே (புறம்-117)

என்பது புலவர் பெருமான் கபிலரின் வாக்கு.

வேள்பாரி, பறம்பு மலையையும் முந்நூறு ஊர்களையுடைய தண்பறம்பு நாட்டையும் ஆட்சிபுரிந்து வந்தான். பாரியின் அவைக்களப்புலவராய், அரிய நண்பராய்த் திகழ்ந் தார் கபிலர். பாரியின் அழகிய மனை ஓவியம் போன்றது. பாரி, அந்த மனையில் பாவைபோன்ற அழகும், நற்குணங் களின் வைப்பாகவும் அமைந்த நங்கையை வாழ்க்கைத் துணை நலமாகப் பெற்று மனையறத்தை இனிதே நடத்தி வந்தான். அவ்விருவர் நடாத்திய மங்கல மனையறத்தின்

பயனாய் மகளிர் இருவர் பிறந்தனர். அம்மகளிர் இருவரும் கல்வி, கேள்வி, ஒழுக்கங்களில் சிறந்து விளங்கினர். பாரியின் இல்லறம் நல்லறமாக விளங்கியது; இன்பம் நிறைந்ததா யிருந்தது.

பாரியின் புறவாழ்வு புகழ் சிறந்து விளங்கியது. வேள் பாரி பெருவீரனாகத் திகழ்ந்தான். கடுமாவை உடையவ னாய்ப் பகைவர்க்கு இன்னாதவனாய் இருந்தான். வீரம் செறிந்த அவன், நீரினும் இனிய சாயலுடையவனாய்த் திகழ்ந்தான். ஆடிவரும் விறலியர்க்குப் பொன்னரிமாலை, பொற்றாமரைப்பூ முதலிய அணிகலன்களை வாரி வழங்கி னான். பாடிவரும் பாணர்க்குத் தேரும் யானையும் கொடுத்து அவர்கள் கையிலுள்ள மண்டை நிறையக் கள்ளையும்வார்த்துக் களிப்பில் ஆழ்த்தினான். இரவலர்க் கெல்லாம் வரையாதளித்தான். புலவர்களுக்கு அவர்களின் திறனறியாது ஈந்தான். அவர்களின் பாடல்கள் நல்லனவா அல்லனவா எனப் பகுத்தாராயாது வழங்கினான். அதில் வேற்றுமை காட்டினானல்லன். இறைவன் எப்படி நல்ல மலர் அல்லமலர் என்ற வேறுபாடு கருதாமல் எருக்கம் பூவையும் ஏற்றுக்கொள்கிறானோ, அப்படி அவன் மடவர், மெல்லியர் சென்றாலும் ஏற்று,அவர்களுக்கெல்லாம் ஒன்று போல் வழங்கும் கைவண்மையுடையவனாயிருந்தான்.

வள்ளல் பாரி, ஈகைத் திறத்தில் ஒப்பாரும் மிக்காரு மின்றி விளங்கினான். கொடைத்தன்மையில் அக்காலத்து முடியுடை மூவேந்தர்களை விஞ்சி நின்றான். நிழலில்லாத நீண்ட வழியில் தனியாக ஒருமரம் நின்று அவ்வழியில் போவோர் வருவோர்க்கெல்லாம் நிழல் தருவது போல் பாரி விளங்கினான். எனவே, அவனை நினைந்து இரவலர் கள் ஓயாது வந்தனர். பாரியின் புகழ் பாரெல்லாம் பரவியது. செந்நாப்புலவர்கள் இவ்வுலகைக் காத்து

வருபவன் பாரி ஒருவனே என்று புகழ்ந்தனர். இது கண்ட கபிலர் பெருமான்,

"பாரி பாரி என்று பல ஏத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி ஒருவனும் அல்லன்
மாரியும் உண்டு ஈண்டு உலகுபுரப் பதுவே" (புறம்-107)

என்று பாடினார். இவ்வாறு பாரியின் கொடைப்புகழ் நாடெங்கும் பரவியது.

**முல்லைக்குத் தேரீந்த வள்ளல்**

வள்ளல்பாரி ஒருநாள் நறுமலர்கள் பூத்துச் சொரியும் சுரபுன்னையடர்ந்திருக்கும் நெடுவழியில், ஒலிக்கின்ற மணிகளால் ஒப்பனை செய்யப் பெற்ற தேரில் ஏறிச் சென்றான். செல்லும் வழியில் மரகதக் கொடியில் வைரமணிபோல் ஒளிர்கின்ற வெண்மலர்களைத் தாங்கிய முல்லைக் கொடி ஒன்று பற்றிப்படரக் கொம்பொன்றுமின்றிக் காற்றால் அலைக்கப்பட்டு அலங்கோலமாகக் கிடந்தது. அதைக் கண்டதும் பாரியின் கருணையுள்ளம் பதறியது. உடனே பாரி, தேரினின்றும் விரைந்து இறங்கினான். தேரில் பூட்டப் பெற்றிருந்த குதிரைகளை அவிழ்த்துவிட்டு, அந்த அழகிய தேரின்மீது கீழே கிடந்த முல்லைக் கொடியைத் தன் அருட்கரத்தால் எடுத்து மெதுவாகப் படர விட்டான். தேரை அப்படியே அந்த முல்லைக் கொடிக்கு அருகிலேயே நிறுத்திவிட்டு மகிழ்ச்சி பொங்க நடந்து தன் இல்லம் வந்து சேர்ந்தான்.

அந்த முல்லைக் கொடி, தான் பற்றிப்படரக் கொம் பொன்றுமில்லையென்று வருத்தமுற்றுப் பாரியை இரக்க வில்லை; புகழ்ந்துரைக்கவும் இல்லை. அந்த முல்லைக் கொடி பேசாது என்பதையும், தான்பேசினாலும் அதை உணராது என்பதையும் அப்போது வள்ளல்பாரி நினைக்க

வில்லை. அவன் உள்ளத்தில் அப்போது நிறைந்திருந்தது முல்லைக் கொடியின் துன்பம் ஒன்றே. எனவேதான் அவன் ஏறிவந்த கறங்குமணி நெடுந்தேரைக் 'கொள்' என்று சொல்லிக் கொடுத்தான் அந்தக் கொடைவள்ளல். வள்ளல் பாரியின் கருணையுள்ளம் கடலினும் பரந்தது. வானினும் உயர்ந்தது; ''வாடிய பயிரைக்கண்ட போதெல் லாம் வாடினேன்'' என்று பாடிய அருட்பிரகாச வள்ள லாரின் பேருள்ளம், வள்ளல் பாரியின் அருள் உள்ளமாகும்.

**போர்மேகம்**

தண்பறம்புமலையில் கார்மேகம் வந்து சூழ்வது இயற்கையாய் இருந்தது. ஆனால், அங்குச் செயற்கையான போர்மேகமும் சூழ்ந்தது. முடியுடை மூவேந்தர்க்கும் மேலாக இரவலர்க்கு வழங்கிய பாரியின் கொடைப்புகழ் கண்டு அவ்வேந்தர் அழுக்காறு கொண்டனர்; இனியனா கிய பாரியின்மீது இன்னாதபகை கொண்டனர்; ஆதலால், வள்ளல்பாரியை அழிக்கத் திட்டமிட்டனர். அதற்கு ஏது வாகப் பாரிமகளிர் இருவரையும் மகட்கொடை வேண்டி னர். வள்ளல்பாரி அம்மன்னர்க்கு மகட்கொடை மறுத் தான். அதனால் சினமுற்ற மூவேந்தரும் ஒவ்வொருவராக வந்து பறம்புமலையை முற்றுகையிட்டனர். 'அது கண்ட கபிலர், அந்த மூவேந்தரையும் நோக்கி,

''மரந் தொறும் பிணித்த களிற்றினிர் ஆயினும்
புலந்தொறும் பரப்பிய தேரினிர் ஆயினும்
தாளிற் கொள்ளலிர்; வாளிற் றாரலன்.
யான்அறிகுவன் அது கொள்ளு மாறே
சுகிர்புரி நரம்பின் சிறியாழ் பண்ணி
விரையொலி கூந்தல்நும் விறலியர் பின்வர
ஆடினிர் பாடினிர் செலினே
நாடுங் குன்றும் ஒருங்கீ யும்மே!'' (புறம்-109)

என இகழ்ச்சி தோன்றப் பாடினார். இதனால், மேலும் ஆத்திரமுற்ற மூவேந்தர் முற்றுகையைத் தொடர்ந்தனர். பறம்பு மலைமேல் வாழ்ந்த மக்களுக்கு உணவாக உழவர் உழாமற் கிடைத்த மூங்கில் நெல், தீஞ்சுளைப்பலா, வள்ளிக்கிழங்கு, தேன் ஆகிய உணவுப் பண்டங்கள் கிடைத்துவந்தன. ஆயினும் நெல்லரிசி உணவு குறைந்தது. முற்றுகையோ பலநாள் நீட்டித்தது. கபிலர் பெருமான் இந்தக் குறையை நீக்க எண்ணினார். பறம்புமலைக் கிளி களைப் பிடித்துப் பழக்கினார். அந்தக் கிளிகளை, அனுப்பி பறம்புமலைக்கு அப்பால் வயல்களில் விளைந்து முற்றிச் சாய்ந்திருக்கும் செந்நெற் கதிர்களைக் கொணருமாறு செய்தார். இதனால் பறம்புமலையகத்து வாழ்வோர் அரிசி உணவு பெற்றனர். அரண்காக்கின்ற வலிமையும் மனமும் பெற்றுத் திகழ்ந்தனர். "இடுக்கண் களைவதாம் நட்பு" எனும் இலக்கணத்துக்கு இலக்கியமாகத் திகழ்ந்தார் கபிலர் என்பதை இதனால் அறிகின்றோம். கபிலரின் இந்த அரும் பணியை ஔவையாரும், நக்கீரரும் போற்றிப் புகழ்ந் துள்ளனர். (அகம் 303,78)

இனியும் காலம் நீட்டிப்பது தன் வீரத்துக்கு இழி வாகும் என்று கருதினான் வேள்பாரி. முற்றுகையிட்டிருந்த அந்த வேந்தரை வென்று துரத்த வேண்டும் என்று முடிவு செய்தான். தன் வாள்வலி காட்டிப் போர் புரிந்தான்; எதிர்பாராமல் ஏற்பட்ட பாரியின் தாக்குதலைத் தாங்க மாட்டாமல் அவ்வேந்தர் படை நிலைகுலைந்தது; புறங் கொடுத்தோடியது. இச்செய்தி,

"இரும்பல் கூந்தல் மடந்தையர் தந்தை
ஆடுகழை நரலும் சேட்சிமைப் புலவர்
பாடி யானாப் பண்பிற் பகைவர்
ஓடு கழற் கம்பலை கண்ட
செருவெஞ் சே எய்" (புறம். 120)

என்னும் கபிலர் பாட்டாலும்,

"யாண்டுபல கழிய வேண்டுவயின் பிழையா
தாளிடூஉக் கடந்து வாளமர் உழக்கி
ஏந்து கோட்டு யானை வேந்தர் ஓட்டிய
கடும்பரிப் புரவிக் கைவண்பாரி" (அகம்-78 )

என்னும் மதுரை நக்கீரனார் பாட்டாலும் அறியக் கிடக்கிறது.

இந்தப்போர் முடிந்து சிலகாலம் கழித்து மீண்டும் மூவேந்தரும் ஒருங்கிணைந்து பெரும்படையுடன் வந்து பறம்புமலையை முற்றுகையிட்டனர். அப்போது வள்ளல் பாரிக்குரிய பறம்பு நாட்டின் முந்நூறு ஊர்களையும் பரிசிலர்கள் பெற்றுத் தங்களுக்கு உரிமையாகக் கொண்டிருந்தனர். கபிலர் மூவேந்தரையும் அவர்தம் படைவலிமையையும் கண்டார். அவர்களுக்குப் பாரியின் பேராண்மையையும் வள்ளன்மையையும் எடுத்துக் கூறினார்.

"கடந்தடு தானை மூவிருங் கூடி
உடன்றனி ராயினும் பறம்புகொளற் கரிதே
முந்நூ ஊர்த்தே தண்பறம்பு நன்னாடு
முந்நூ ஊரும் பரிசிலர் பெற்றனர்
யாமும் பாரியும் உளமே
குன்றும் உண்டு, நீர் பாடினிர் செலினே"
(புறம். 110.)

என்று பாடினார். இது கேட்ட அப்பகைவர் நெடிது நினைந்தனர்; முன்னியது முடித்தனர்!

கபிலர் பெருமான் கூறியவாறோ, வேறுவகையாலோ யாதென அறிகிலோம்! "அண்ணல் யானை வேந்தர்க்கு இன்னானாகிய இனியன்", "நிழலின் நீளிடைத் தனி மரம் போலப் பணைகெழு வேந்தரையிறந்தும் இரவலர்க்கு ஈயும்" இணையிலா வள்ளல் பாரியின் இன்னுயிர் அந்தோ மறைந்தது! முல்லைக்குத் தேரும், பரிசிலர்க்கு முந்நூறு ஊர்களும், மூவேந்தர்க்குத் தன்னுயிரையும் ஈந்த

மாரியன்ன வள்ளல் பாரியின் மண்ணக வாழ்வு மறைந்தது! பாரியின் வாழ்க்கைத் துணை நலமாகிய "பாவையன்ன நல்லோன்" ஆகிய மங்கலமனை விளக்கும் அணைந்தது! பறம்பு மலையையும், பைந்தமிழ்நாட்டையும் இருள் சூழ்ந்தது.

**பாரிமகளிர் துயரம்**

பறம்புமலை, தன் தலைவனை இழந்தது; பாரிமகளிர் தந்தையை இழந்தனர். சான்றோர் கபிலர் தோழனை இழந்தார்; இரவலர்கள், புரவலனை இழந்தனர்; அருளின் ஊற்றுக் கண் அடைப்பட்டுப் போனது. தந்தையை இழந்து நவித்த பாரிமகளிர் இருவரையும் பறம்புமலையினின்றும் அழைத்துக் கொண்டு கபிலர், அதன்பக்கத்தில் காப்புள்ள வேறோர் இடத்திற்குச் சென்றார். ஒரு திங்கட் காலம் அவர்கள் அங்குத் தங்கினர். அருமைத் தந்தையை இழந்த துயரத்தாலும் பறம்புமலையைப் பறிகொடுத்த துயரத்தாலும் பாரிமகளிர் பெருங்கலக்கமடைந்திருந்தனர் ஒரு நாளிரவு வானத்து முழுமதி பால்நிலவைப் பொழிந்து கொண்டிருந்தது. அது கண்ட பாரி மகளிர் துக்கமிகுதியால் வருந்தினர்.

"அற்றைத் திங்கள் அவ்வெண் ணிலவின்
எந்தையும் உடையேம்; எங்குன்றும் பிறர்கொளார்;
இற்றைத் திங்கள் இவ்வெண்ணிலவின்
வென்றெறி முரசின் வேந்தர் எம்
குன்றும் கொண்டார், யாம்எந்தையும் இலமே!
(புறம். 112)

என்று பாடிக் கண்ணீர் சொரிந்தனர்: பின் கபிலர் பெருமான் காப்பால் ஆறுதல் பெற்றனர்.

**கபிலரின் புலம்பல்**

உலகுடன் திருதரும் பலர்புகழ் நல்லிசை வாய்மொழிக் கபிலர், தன் உயிர்த் தோழராகிய" வருடன் இரவலர்க்கு அருளித் தேர் உடன் முல்லைக்கு ஈத்த செல்லா நல்லிசைப்

படுமணியானைப் பறம்பிற் கோமான் நெடுமாப்பாரியின் பிரிவால் வருந்தினார்; உள்ளுருகினார். எனினும் தன் தோழன் பாரியின் மகளிர்க்குத் திருமணம் செய்விப்பதை அவர் தன்கடமையாகக் கொண்டார்; அதனால் தன்னுயிர் போக்காதிருந்தார்: பாரிமகளிரை அழைத்துக் கொண்டு பறம்புமலையை விட்டுப் புறப்பட்டார். அது போது பெருந்துயரமெய்தினார். தனக்கு உணவளித்துக் காத்த அந்தப்பறம்புமலையை நினைந்தார்; பாரியைப் பிரிந்த துயரத்தால் கண்ணீர்சொரிந்தார்; பின் தொழுது வாழ்த்தினார்.

"புகழ்பெற்ற பறம்புமலையே! மதுவுள்ள கலம் வாய் திறந்திருக்கவும், ஆட்டுக்கிடாயை வெட்டிச் சமைக்கப் பெற்ற ஊனோடு கூடிய சோற்றையும், கொழுமையான துவையலையும் விரும்பியவாறு தரும் பெருவளம் நிறைந்து முன்பு எம்முடன் நட்புச் செய்தாய்! இப்போது பாரி மாய்ந்து விட்டான்! அதனால் கலங்கிச் செயலற்றோம்! கோல் போன்று திரண்ட குறுவளையல்களை அணிந்த முன்கையுடைய பாரி மகளிரின் மணங்கமழும் கருங் கூந்தலைத் தீண்டுதற்குரியவரை நினைந்து கண்ணீர் சொரிய உன்னைத் தொழுது வாழ்த்திச் செல்கின்றோம்" என்று கூறி அடக்கமுடியாத் துயரத்தால் கண்ணீர் சிந்தினார்.

பறம்புமலையை விட்டுச் சிறிது தூரம் சென்றார். அந்த மலையைத் திரும்பிப் பார்த்தார். மேலும் மேலும் சென்று சென்று திரும்பித் திரும்பிப் பார்த்தார்.

"ஈண்டுநின் றோர்க்கும் தோன்றும் சிறுவரை
சென்றுநின் றோர்க்கும் தோன்றும் மன்ற
களிறு மென்று இட்ட கவளம் போல
நறவுப்பிழிந்து இட்ட கோதுடைச் சிதறல்

வார் அகம் பொழுகும் முன்றிற்
றேர்வீசு இருக்கை நெடியோன் குன்றே:
(புறம்.114)

என்று பாடி நெஞ்சம் வெதும்பினார்.

பாரி மகளிர்க்கு மணமகனைத் தேடிச் சென்ற காலத்தில் அவர்கள் ஓரிடத்தில் ஒரு சிறிய வீட்டில் தங்கியிருந்தனர். அவ்வழியாக உமணர்கள் உப்பு வண்டிகள் பல சென்று கொண்டிருந்தன. பாரிமகளிர், ஈச்சம் ஓலைகள் குவிக்கப்பட்ட குப்பைமேடு ஒன்றில் ஏறிநின்று அந்த வண்டிகளை எண்ணிக் கொண்டிருந்தனர். இதனைக் கண்ட கபிலருக்குத் துயர உணர்ச்சி பீறிட்டெழுந்தது.

"பறம்புமலையின் மீது நின்று, போருக்கு வந்த வேந்தர்களின் குதிரைகளை அன்று எண்ணிக் கொண்டிருந்த இந்த மகளிர், இன்று ஈச்சம் ஓலை குவிந்த குப்பை மேட்டின் மீது நின்று உமணர்களின் உப்பு வண்டிகளை எண்ணவேண்டிய நிலை ஏற்பட்டு விட்டதே: இது கண்டு நான் நோவேன்! என் வாழ் நாள் கெடுவதாக! என்னும் பொருளமைந்த துயரப் பாடலைப் பாடி வருந்தினார்.

**திருமண முயற்சி**

இவ்வாறு கபிலர், பாரியின் நினைவும், பறம்பின் நினைவுமாக வாடினார்; பாரிமகளிரின் நிலைகண்டு வருந்தினார். ஆயினும் பாரி மகளிர்க்கு விரைவில் திருமணம் செய்விப்பதைத் தன் வாழ்க்கைக் கடமையாகக் கொண்டிருந்தார். பாரியின் பெருமைக்கும் பாரிமகளிரின் அருமைக்கும் பொருத்தமான ஆடவரைத் தேடினார்;

அக்காலத்து விச்சிமலை என்ற மலையையும், அதைச் சூழ்ந்திருந்த நாட்டையும் ஆண்டு கொண்டிருந்தான் விச்சிக்கோ என்பவன். அவன் பாரிமகளிரை மணக்கத்

தகுதியானவன் என்று கருதினார் கபிலர்; அம்மகளிரை அழைத்துக் கொண்டு அவன்பாற் சென்றார். "விச்சிக் கோவே! இவர்கள் முல்லைக்குத் தேரீந்த வள்ளல் பாரியின் மகளிர். நான் ஒரு பரிசிலன்; அந்தணன். நீயோ போர் செய்யும் முறையால் பகைவரைத் தாழ்விக்கும் வாளால் மேம்படுபவன். இவர்களை நான் தர, ஏற்று மணந்து இனிது வாழ்வாயாக!" என்று வேண்டினார். ஆனால், விச்சிக்கோ எக்காரணத்தாலோ மறுத்துவிட்டான். கபிலர் பெருமானின் வேண்டுகோள் வீணாயிற்று. கபிலர் அவனிடமிருந்து விடைபெற்றார்.

பின், இருங்கோவேள் என்பானுக்கு மணம் முடித்தல் சாலும் என நினைந்தார். பாரிமகளிரை அழைத்துக் கொண்டு அவன் நாடு சென்று அவனைக் கண்டார். "வேளிருள்வேளே! இவர்கள் முல்லைக்குத் தேரும் இரவலர்க்கு முந்நூறு ஊரும் கொடுத்துப் புகழ்பெற்ற பறம்பிற் கோமான் பாரியின் மகளிர். நான் இவர் தந்தைதோழன், அந்தணன்; புலவன் என்று அறிமுகப்படுத்திக் கொண்டு அவன் வீரத்தைப் பலபடப் பாராட்டி "இம்மகளிரை யான்தர மணந்து கொள்க" என்று வேண்டினார். இருங்கோவேள் மறுத்து விட்டான். அவன் மறுப்பு கபிலரின் வேண்டுகோளை இகழ்ந்த குறிப்புடையதாகவும் இருந்தது தன் சொல்லைப் புன்சொல் என்று நினைத்து மறுத்த இருங்கோவேள்பால் கபிலருக்கும் அருவருப்பும் சினமும் உண்டாயின.

"வேளே! நின்னாட்டில் பொன்வளம் சிறந்தோங்கி, சிற்றரையம் பேரரையம் என இருபகுதியாய் விளங்கிய அரையமென்னும் மூதூர் இன்று அழிந்து கிடப்பதற்குக் காரணம் நீ அறியாய்! கூறுவேன் கேள்! நின் முன்னோருள் நின்னைப் போலும் அறிவுடைய ஒருவன் செந்நாப் புலவரான கழாஅத்தலையாரை இகழ்ந்தான். அதனால்

விளைந்த கேடுதான் அது. இந்த மகளிர் எவ்வியின் குடியில் தோன்றியவர்கள் என்றும் பாரி மகளிர் என்றும் கூறிய என் தெளிவற்ற புன்சொற்களைப் பொறுத்துக் கொள்க! யான் விடைபெறுகிறேன்! நின் வேல் வெல்க!'' என்று பாடிவிட்டு அங்கிருந்து புறப்பட்டார்.

இருங்கோவேளை விட்டுப் புறப்பட்டுச் சென்ற கபிலர் பெருமான் மனம் நொந்து வருந்தினார். பாரி மகளிரை அழைத்துக் கொண்டு மலையமான் நாட்டுத் திருக்கோவலூர் சென்றடைந்தார். திருக்கோவலூரில் முன்னமே தாம் பார்ப்பார் சிலரிடத்தில் பாரி மகளிரின் அருமைபெருமையை அவர்களிடம் எடுத்துக்கூறி அடைக்கலப்படுத்தினார். "விரைவில் வருவேன்; அதுவரை ஆற்றியிருங்கள்!" என்று பாரிமகளிர்க்கு ஆறுதல் கூறி அகன்றார்.

**பொருள் தேடச்சென்றார்**

பாரிமகளிரை வேளிர்குலத்தலைவருள் எவரும் மணம் புரியத் துணியாமைக்குக் காரணம் யாது? என்று கபிலர் சிந்திக்கலானார். மூவேந்தரின் பகை வரும் என்று மறுத்தனரோ? அத்துணை ஆண்மையில்லாத தமிழ் மன்னரும் இருப்பரோ? பாரிமகளிரின் ஏழைமை கருதி இகழ்ந்து மறுத்தனரோ? என்று பலவாறு கவன்றார். முதலில் பாரி மகளிரின் ஏழைமையைப் போக்குவது கடமையென்று உணர்ந்தார். என்ன செய்வது? யாரிடம் போய்க் கேட்பது? என்று சிந்தித்தார். தன்னை வாழ்வித்த பாரியிடமும் இரந்தவரல்லர் கபிலர்; எனினும் பாரிமகளிரின் வாழ்வு கருதிச் சென்றிரக்க வேண்டிய நிலை அவருக்கு ஏற்பட்டு விட்டது.

சேரநாட்டை நோக்கி நடந்தார். சேரமன்னனாகிய செல்வக்கடுங்கோ வாழியாதன் என்பானை அடைந்தார். அந்த மன்னன் புலனழுக்கற்ற அந்தணாளர் கபிலரின் வருகையால் அகம் மிக மகிழ்ந்தான். உரியவாறு புலவர்

பெருமானை வரவேற்றான்; கபிலரும் மகிழ்ந்தார். பெருவேந்தனாகிய செல்வக்கடுங்கோ வாழியாதனைப் பாட நினைந்தார். அப்போது கபிலரின் நெஞ்சத்தில் பாரிபற்றிய உணர்வே ஓங்கி நின்றது. ஆதலால், அவர் பாரியின் பெருமை பற்றிப்பாடியே பாடலைத் தொடங்கி யுள்ளார்.

"பலா மரத்தில் பழுத்து வெடித்த பழத்தின் வெடிப்பி லிருந்து ஒழுகும் தேனை, வாடைக்காற்று எடுத்து மணம் பரப்பும் பறம்பு நாட்டிற்குரிய பெருவிறல் படைத்தவன் பாரி. ஓவியத்தில் எழுதியது போன்ற வேலைப்பாடு அமைந்த நல்லமனையின்கண் இருக்கும் பாவையைப் போன்ற நல்லோள் கணவன் அவன்; பொன்போல் நிறமுடைய பூவினையும் சிறிய இலையினையும் புல்லிய அடிப்பகுதியினையும் அடைய உன்னமரத்துக்குப் பகைவன்; எமக்கு அரசன்; பூசிப் புலர்ந்த சாந்தினையுடைய அகன்ற மார்பினன்; வற்றாத ஈகையுடைய வள்ளன்மையுடையவன். அத்தகைய பாரி, முழவினிடத்தே பூசிய மார்ச்சனை புலர்ந்தொழியவும், இரவலரெல்லாம் வருந்தவும் மீண்டும் வாரா மேலுலகிற்குச் சென்றுவிட்டான். ஆதலால் எம்மை நீ காப்பாய் என்று இரந்து வந்தேனில்லை'. ஆனால், நின்புகழைக் குன்றவும் மிகைபடவும் கூற மாட்டேன். நீ, ஈதலால் பொருள் செலவாவது குறித்து வருத்தமுறுவதில்லை எனவும், ஈயும் தொறும் புகழ் மிகுவதால் மகிழ்ச்சி கொள்வதுமில்லை எனவும், ஈயும் போதெல்லாம் பெரிய வள்ளன்மையுடையன் எனவும் உலகோர் கூறும் நினது நற்புகழ் எம்மை நின்பால் ஈர்த்தமையால் வந்தேன்!" என்று செல்வக்கடுங்கோ வாழியாதனைப் பாடத்தொடங்கி பத்துப்பாடல்கள் பாடி யுள்ளார். இந்தப் பாடல்கள் பதிற்றுப்பத்து ஏழாம் பத்தாக அமைந்துள்ளன. இப்பாடல் கேட்டு மகிழ்ந்த

செல்வக்கடுங்கோ வாழியாதன், கபிலர் பெருமானுக்கு, ''சிறுபுறமென நூறாயிரம் காணம் கொடுத்து, ''நன்றா'' என்னும் குன்றேறி நின்று தன் கண்ணிற் கண்ட நாடெல்லாம் காட்டிக் கொடுத்தான்!''

**பாரி மகளிர் திருமணம்**

பாரி மகளிர்க்கு மணம் முடிப்பதொன்றையே கடனாகக் கொண்டு உலகில் நடமாடிவந்த கபிலர் தம் கடமையில் கண்ணாக இருந்தார். செல்வக்கடுங்கோ வாழியாதனிடம் சில நாள் தங்கியிருந்து பின் காலந் தாழ்த்தாது விடைபெற்றுக் கொண்டு திருக்கோவலூருக்கு வந்து சேர்ந்தார். அங்கு பார்ப்பாரிடத்து அடைக்கலப் படுத்தப்பெற்ற தம் கண்மணியன்ன பாரி மகளிரைக் கண்டு மகிழ்ந்தார்; அவர்களுக்கு மணம் முடிக்கக் கருதிமுயற்சி மேற்கொண்டார்.

அக்காலத்து மலையமான் திருமுடிக்காரியின் மக்கள் இருவர் திருக்கோவலூரிலிருந்து நாடாண்டிருந்தனர். மகளிர் இருவர் இருப்பதற்கேற்ப மலையமான் மக்கள் இருவர் இருப்பது அறிந்து மகிழ்ந்தார். அவர்கள் இருவரையும் கண்டு தன் விருப்பத்தைத் தெரிவித்தார். மலையமான் மக்கள் இருவரும் பாரிமகளிரை மணக்க இசைந்தனர். மணவிழா நிகழ்ந்தது. அவ்விழாவைக்கண்டு களித்தார் கபிலர் பெருமான். பாரிமகளிரை மணந்தவர்கள் மலையமான் மக்களாகிய தேர்வண்மலையன் என்பானும், மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணன் என்பானும் ஆவர் என்பது அறிஞர் கருத்து.

**கபிலர் மறைவு**

கபிலரின் கடமை நிறைவேறியது. நிறை வேறியபின் கபிலரின் நட்புநெஞ்சம் பாரியின் பிரிவை எண்ணி எண்ணி உருகியது; பாரியில்லாத இவ்வுலகை வெறுத்தது. அதனால்

அவர் உயிர்விடத் துணிந்தார். திருக்கோவலூரில் - பெண்ணையாற்றின் தென்கரையை அடைந்தார். அப்போது அவர் வேள்பாரியை நீடு நினைந்து கல்லும் கரைந்துருகும்படி பாடினார்.

"பெரிய வள்ளன்மையுடைய பாரி! என்னை நீ பல ஆண்டுகள் பேணிக்காத்தாய்! அக்காலமெல்லாம் நீ என்னோடு உயிர்கலந்து ஒன்றிய கேண்மையுடையவனாய் ஒழுகினாய்! ஆயினும் நீ இவ்வுலகினின்றும் பிரியும்போது என்னையும் உன்னோடு உடன் வரவிடாது 'இருந்து வருக' எனக் கூறிப்பிரிந்தாய்! இதனால் நீ என்பால் வேறுபட்டாய் போலும்! யான் நினக்குப் பொருந்தாதவன் போலும்: ஆயினும் இப்பிறப்பில் நம்மிருவரையும் கூட்டி வைத்து, ஒன்றிய நட்பால் உயர்வாழ்வு வாழச் செய்த நல்லூழ், மறுமையிலும் நின்னோடு உடனுறையும் வாழ்வை நல்குவதாக!" என்று பாடி உயிர் நீத்தார்; உன்னதப்புகழ் பெற்றார்.

கபிலர் பெருமான் வடக்கிருந்து உயிர்விட்டார் என்று புறநானூற்று நூலில் காணப்படுகிறது. தீப்பாய்ந்து உயிர் நீத்தார் என்று திருக்கோவலூர் வீரட்டானேசுவரர் கோயிலில் உள்ள முதலாம் இராசராச சோழன் காலத்துக் கல்வெட்டுக் கூறுகிறது. எப்படியாயினும் அவர் பாரியை நினைந்து தாமே உயிர் நீத்தார். என்பது உறுதி.

"வன்கரை பொருது வருபுனற் பெண்ணைத்
தென்கரை யுள்ளது தீர்த்தத் துறையது
மொய்வைத் தியலும் முத்தமிழ் நான்மைத்
தெய்வக் கவிதைச் செஞ்சொற் கபிலன்
மூரிவண் தடக்கைப் பாரிதன் அடைக்கலப்
பெண்ணை மலையர்க்கு உதவிப் பெண்ணை
அலைபுனல் அழுவத் தந்தரி க்ஷஞ்செல

மினல்புகும் விசும்பின் விடுபே றெண்ணிக்
கனல்புகும் கபிலக் கல்லது''

என்பது திருக்கோவலூர்க் கல்வெட்டுச் செய்தி.

வையகம் போற்றும் வள்ளலின் வாழ்வும் பொய்யா நாவிற் புலவர் வாழ்வும் உலகமக்களின் நெஞ்சங்களில் என்றென்றும் ஒளி வீசிக் கொண்டிருக்கும் ஒப்பற்ற பெரு வாழ்வாகும்.

பாரியெனும் அருட்சுடரையும் கபிலர் என்னும் அறச் சுடரையும் தாங்கி ஒளிவீசிய பொன்றாப்புகழுடைய புண்ணியமலை பறம்புமலை. இந்தப் பறம்புமலையை எண்ணினாலே போதும்! புண்ணியம் வந்து பொருந்துவது திண்ணம்!

# தலப்பெருமை

ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முன், புலனழுக் கற்ற அந்தணாளராகிய கபிலர் பெருமான் வான்தடவி நிற்கும் பறம்புமலை உச்சியிலிருந்து தேன்தடவிய செந் தமிழ்ப் பாடல் ஒன்று பாடினார்.

''நல்லவும் தியவும் அல்ல குவியிணர்ப்
புல்லிலை எருக்கம் ஆயினும் உடையவை
கடவுள் பேணேம் என்னா; ஆங்கு
மடவர் மெல்லியர் செல்லினும்
கடவன் பாரி கைவண் மையே!'' (புறம்-106)

என்பது அத்திருப்பாட்டு. இப்பாட்டு வள்ளல் பாரியின் கை வண்மை போற்றும் பாடலேயாயினும், இறைவனின் எளிவந்த தன்மையை விளக்கும் பாடலாகவும் விளங்கு கின்றது. சிவபெருமான் அன்பால் அருச்சிக்கும் எருக்கம்

பூவையும் ஏற்றுக்கொள்ளும் பேரருளாளன் என்பதை இப்பாடல் சிவமணம் கமழ எடுத்துரைக்கின்றது. எனவே பறம்புமலையில் வள்ளல் பாரி காலத்திலேயே (ஏறத்தாழ கி.பி. 120-160) சிவ சிந்தனை மலர்ந்துள்ளதை அறிகின்றோம். அக்காலத்தில் இத்திருமலையில் சிவன்கோயில் இருந்தது என்று கூற முடியாதாயினும் சிவவழிபாடு இருந்தது என்பதை இப்பாடல் கொண்டு உய்த்துணரலாம்.

கி.பி. ஏழாம் நூற்றாண்டினராகிய திருஞானசம்பந்த சுவாமிகளின் தேவாரத் திருப்பதிகம் பெற்றது இத்திருத் தலம் என்பது அனைவரும் அறிந்த ஒன்றாம். அதே காலத்தில் வாழ்ந்த அப்பரடிகள் "கொடுங்குன்றன் காண் கொல்லை ஏற்றினான் காண்" எனத் திருவாரூர்த் திருத் தாண்டகத்தில் இத்தலத்தில் 'எழுந்தருளியுள்ள பெருமானை நினைந்துள்ளார். சுந்தரமூர்த்தி சுவாமிகள் "கொடுக்கிலாதானைப் பாரியே என்று கூறினும் கொடுப் பாரிலை" என்று வள்ளல் பாரியைப் புகழ்வதன் மூலம் இத்திருத்தலத்தை நினைந்துள்ளார். மாணிக்கவாசக சுவாமிகள் தாம் அருளிய திருச்சிற்றம்பலக் கோவையாரில் "கொடுங்குன்றின் நீள்குடுமி மேற்றேன் விரும்பும் முடவனைப் போல்" என்றுபாடுவதன் மூலம் இத்தலத்தை நினைந்துள்ளார். இவ்வாறு நால்வர் பெருமக்கள் திருவுள்ளமும் நினைந்து போற்றிய திருத்தலம், திருக்கொடுங்குன்றமாகும்.

திருஞான சம்பந்த சுவாமிகள் "நன்றியில் நெறியில் அழுந்திய நாடும் நற்றமிழ் வேந்தனும் உய்ய"த் திருவுள்ளம் கொண்டு சோழநாட்டிலிருந்து மதுரை மாநகருக்கு எழுந்தருளி வந்த காலத்தில் இத்தலத்திற்கு எழுந்தருளி அருந்தமிழ் பாடிப் பின் ஆலவாய்க்குச் சென்றார் என்பது வரலாறு. எனவே திருஞானசம்பந்தரால் முதன்முதலில் பாடப்பெற்ற பாண்டிப்பதி இதுவாகும்.

"கொடுங்குன்றத் தினிதமர்ந்த
 கொழும்பவளச் செழுங்குன்றை
அடுங்குன்றம் உரித்தானை
 வணங்கி அருந் தமிழ்பாடி,
நெடுங்குன்றும் படர்கானும்
 நிறைநாடும் கடந்து, மதி
தொடுங்குன்ற மதில்மதுரைத்
 தொன்னகர் வந் தணைகின்றார்."

என்று இச்செய்தியை உளங்குளிர்ந்து பாடுவார் தெய்வச் சேக்கிழார் பெருமான்.

அருணகிரி நாத சுவாமிகளின் திருப்புகழ்ப் பாடல் பெற்ற முருகன் எழுந்தருளியுள்ள திருத்தலமுமாகும் இது.

திருக்கயிலாயத்திற் போல அம்மையப்பர், மங்கை பாகராய்த் திருமணக் கோலத்துடன் இங்கு எழுந்தருளி யிருப்பதால் தென்கயிலாயம் என்று போற்றப்பெறும் பெருமையுடையது இத்திருத்தலமாகும்.

## திருக்கோயில் அமைப்பு

திருக்கொடுங்குன்றம், 50 கி.மீ. தொலைவில் எந்தத் திசையிலிருந்து பார்த்தாலும் காட்சிதரும் குன்றமாகும். இக்குன்றத்தை நோக்கி வந்தால் வருவோரை "வா,வா!" என்றழைப்பது போல் தோற்றம்தரும் அருள்மலை இது. இந்தமலையின் தென்மேற்கு அடிவாரத்தில் பிரான்மலைக் கிராமம் அமைந்துள்ளது. ஊரையொட்டி மலையின் அடி வாரச் சரிவில் 30 ஏக்கர் பரப்பளவில் அருள்தரு திருக் கொடுங்குன்ற நாதர் திருக்கோயிலும் அதற்குமேலே அருள்தரு பைரவசுவாமி திருக்கோயிலும் அதற்குமேலே அருள்தரு மங்கைபாக சுவாமி திருக்கோயிலும் அமைந்

துள்ளன. இந்த மூன்று திருக்கோயிற் பகுதிகளையும் உள்ளடக்கிக் கொண்டு மிகப்பெரிய சுற்றுமதில் உள்ளது. இது சுந்தரபாண்டியன் மதில் என வழங்கப் பெறுகிறது.

இத்திருத்தலம் பாதாளம், பூமி, கயிலாயம் என மூன்று நிலையாகச் சொல்லப் பெறுகிறது. அருள்தரு திருக்கொடுங்குன்ற நாதர் திருக்கோயில் - பாதாளம், அருள்தரு பைரவசுவாமி திருக்கோயில் - பூமி, அருள்தரு மங்கைபாக சுவாமி திருக்கோயில் கயிலாயம் ஆகும்.

### 1. (அ)திருக்கொடுங்குன்ற நாதர் திருக்கோயில்

இத்திருக்கோயிலுக்குச் செல்லும் வழி, மலையின் அடிவாரத்தில் தென்மேற்கு மூலையில் கிழக்கு நோக்கித் தொடங்குகிறது. இந்த வழியின் வடபால் கபிலர் பறம்பு நாடு குறித்துப்பாடிய புறநானூற்றுச் செந்தமிழ் பாடற் கல்வெட்டு, தமிழ் மணம் கமழ்ந்து கொண்டிருக்கிறது. அதற்குக் கிழக்கே குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்தின் கிளைமடம் உள்ளது. இந்த மடத்தில் ஆதீன நிர்வாகத்திலுள்ள வள்ளல்பாரி மேல்நிலைப்பள்ளி உள்ளது; தென்பால் பாண்டிநாட்டு ஈசான சிவம் மடம் உள்ளது. அதற்கு எதிரே வடபால் கீழ்மேலோடிய நீண்ட பெருமதில் உள்ளது. திருக்கோயில் தெற்குத் திருமதில் இது. தென்பால் கட்டுமானமுள்ள 'அடைய வளஞ்சான்' எனப்படும் குளம் உள்ளது. அடுத்து மேற்கு முகமாக உள்ளது துரைராஜ் மண்டபம். இந்த மண்டபம் சிவகங்கை மன்னரால்அமைக்க பெற்றதாகும். இந்த மண்டபத்தின் நடுவே, கிழக்குச் சுவரையொட்டி நாலுகால் மண்டபம் மேற்கு முகமாக உள்ளது. சித்திரைத் திருவிழாவின்போது அம்பிகை, தபசுக்கு எழுந்தருளியிருக்கும் மண்டபம் இது. இதற்குத் தென்பால் யானை மகால் உள்ளது.

துரைராஜ மண்டபத்திற்கு வடபால் உள்ளபெருமதிலுக் கிடையே திருக்கோயிலுக்குச் செல்லும் பெரிய திரு வாயில் (குடைவரை வாசல் என்கின்றனர்.) உள்ளது. இத்திருவாயிலைக் கடந்ததும் கிழக்கு மேற்காகத் திருக் கோயில் தெற்கு மதிலுக்கும் வடபால் மலையின் அடிவாரப் பாறையோடு சேர்த்துக் கட்டப்பெற்றுள்ள ஒட்டுச் சுவருக்கும் இடையே கல்தளமிடப் பெற்ற பாதை உள்ளது. இந்தப் பாதையின் கிழக்குக் கோடியில் தேனாடி. தீர்த்தம் (மதுபுஷ்கரணி) உள்ளது. மேற்குக் கோடியில் திருக்கொடுங்குன்றநாதர் கோயில் உள்ளது.

திருக் கொடுங்குன்ற நாதர் சந்நிதி கிழக்கு நோக்கி உள்ளது. சந்நிதிக்கு நேரே கிழக்குத் திருச்சுற்றில் கொடி மரமும், பலிபீடமும் உள்ளன; முக மண்டபத்தில் நந்தி உள்ளது. முகமண்டபத்தில் தெற்கே விநாயகரும், வடக்கே மயில்வாகனராய் சுப்பிரமணியரும் கிழக்குமுகமாக உள்ளனர். மகாமண்டபத்தின் உள்வாயிலுக்கருகில் தெற்கே சூரியபகவான் மேற்கு முகமாக உள்ளார். மகா மண்டபத்தின் மேற்கே சந்நிதியில் நந்தி, பலிபீடம், சூரியப் பிரபை ஆகியவை உள்ளன. இந்தச் சூரியப் பிரபை சிறப் பானதோர் அமைப்பாகும். திருக்கொடுங்குன்ற நாதரின் பிம்பம் இந்தச் சூரியப் பிரபையில் தரிசிக்கும்படி அமைந் துள்ளது. முகமண்டபத்தில் உள்ள நந்திக்குக் குறுக்கே சிலசமயம் நடமாட்டம் இருப்பதால் திருக்கொடுங்குன்ற நாதர் திருவுருவம், இந்தப் பிரபையில் தங்கும்படி அமைக் கப் பெற்றுள்ளது. மகாமண்டபத்தின் மேற்கே சந்நிதிக்குத் தெற்கே ஜ்வராபக்நா மூர்த்தி கிழக்கு முகமாக எழுந் தருளியிருக்கிறார். இந்த மூர்த்தி மூன்று திருமுகமும் நான்கு திருக்கரமும், மூன்று திருப்பாதமும் உடையவர். ஒரு காலத்தில் மாவலிச் சக்கரவர்த்தியின் மைந்தனும் சிறந்த சிவபக்தனுமாகிய வாணாசுரனுக்குச் சார்பாக சிவபெரு

மான், கண்ணபிரா னொடு போர் செய்தார் எனவும் அப் போது கண்ணபிரான், சீதளசுரத்தைச் சிவபெருமான் மீது ஏவ, அந்தச் சீதளசுரத்தை அழிக்க, சிவபெருமான் ஏவிய வெப்பசுரமானது மூன்று சிரம், நான்குகரம், ஒன்பது விழி, மூன்று கால்களுடன் சென்று கணத்தில் மாய்த்தது எனவும், கண்ணபிரான் விடுத்த சுரத்தின் வீறு போக்கிய மையால் சிவபெருமான் ''ஜ்வரா பக்ந மூர்த்தி'' யெனப் பெயர் பெற்றார் எனவும் இந்த மூர்த்தி பற்றி சிவபராக் கிரமம் கூறுகிறது; தீராச் சுரமுற்றோர் இப்பெருமானை வழிபட்டால் சுகமுறுவர் என்றும் கூறுகிறது. இந்த மூர்த்தி மிகச்சில தலங்களில் மட்டுமே உள்ள அரிய மூர்த்தியாவார்.

அர்த்த மண்டபத்தின் மேற்கே சந்நிதிக்குத் தெற்கில் செல்வ விநாயகர் உள்ளார்.

கருவறைக்குள் எம்பெருமான் ஈசன் திருக்கொடுங் குன்ற நாதர் கொழும்பவளச் செழுங்குன்றாய் எழுந் தருளியுள்ளார்.

தெற்குத் திருச்சுற்றின் தென்பக்கம் வரிசையாக அறுபத்து மூன்று நாயன்மார்கள் உள்ளனர். இவர்கள் வரிசையில் மேற்கே நால்வர் மட்டும் தனி வரிசையாக உள்ளனர். நால்வருக்கும் மேற்கே சப்தகன்னியர் உள்ளனர். தெற்குத் திருச்சுற்றின் வடபால் மூலவர் கோயிலை யொட்டித் தென்முகப்பரமன் சனகாதி முனிவரோடு எழுந்தருளியுள்ளார். இவருக்கு அருகில் கிழக்கே மூலவர் கோயில் கற்சுவரின், வெளிப்புறத்தில் மார்பளவுப் புடைப்புச் சிற்பமாகத் திருநாவுக்கரசுவாமிகள் தென் முகமாக உள்ளார். இக்கோயில் கல்வெட்டு (கி.பி. 1264) "திருக்கொடுங்குன்ற முடையநாயனார் திருக்கோயிலில் திருநாவுக்கரசு மண்டபத்து" என்று தெரிவிக்கிறது. எனவே,

அக்காலத்தில் இந்தத் தெற்குத் திருச்சுற்று மண்டபம் திருநாவுக்கரசுமண்டபம்' என அழைக்கப் பெற்றது எனலாம்.

மேற்குத் திருச்சுற்றில் - தென்மேற்கு மூலையில் முக்குறுணி விநாயகர் கிழக்கு முகமாக உள்ளார். அவருக்கு வடக்கே உற்சவமூர்த்திகள்—பஞ்ச மூர்த்திகள் உள்ளனர். அடுத்து பூசைப் பொருள்கள் வைக்கும் அறை இருக்கிறது. அதற்கும் வடக்கே காளத்தி நாதர் சந்நிதி, மீனாட்சி சுந்தரேசுவரர் . சந்நிதி,விசுவநா தர் - விசாலாட்சி சந்நிதி ஆகியன கிழக்கு முகமாக உள்ளன. அதற்கும் வடபால திருநாள் மண்டபம் - திருக் கல்யாண மண்டபம் உள்ளது. மூலவர் கோயில் மேற்குச் சுவரின் நடுவில் லிங்கோற்பவர் உள்ளார்.

வடக்குத் திருச் சுற்றில் வடபால் மேற்குக் கோடியில் வாகனமண்டபமும், அந்த வரிசையில் கிழக்கே திருமுறைக் கோயிலும் உள்ளன. அதற்குக் கிழக்கே ஆடல்வல்லான் எழுந்தருளியுள்ளார். அதற்குக் கிழக்கே யாகசாலையும், மூர்த்தி நாயனார் சந்தன அறைவை அறையும் உள்ளன. அதற்கும் கிழக்கே வடகிழக்கு மூலையில் காலபைரவர் சந்நிதி தெற்கு .முகமாக உள்ளது. வடக்குத் திருச்சுற்றில் மூலவர் கோயிலுக்கு வடமேற்கு மூலையில் வடக்கு முகமாகத் துர்க்கையம்மன் சந்நிதி உள்ளது. அதற்கும் கிழக்கே சண்டீசர் உள்ளார். வடகிழக்கு மூலையில் ஒன்பான் கோள்கள் (நவக்கிரகங்கள்) உள்ளன. அதற்குத் தெற்கே மூலவர் சந்நிதி உள்ளது. கருவறை தனிவிமானம் உடையது.

### (ஆ) அருள்தரு குயிலமுதநாயகி திருக்கோயில்

திருக் கொடுங்குன்ற நாதர் திருக்கோயிலோடு இணைந்து வடபால் அமைந்துள்ளது இத்திருக்கோயில் திருக்கொடுங்குன்றநாதர் திருக்கோயில் திருச்சுற்றின்

வடமேற்கு மூலையில் இத்திருக்கோயிலுக்குச் செல்லும் திருவாயில் உள்ளது.

இத்திருக்கோயில் திருச்சுற்றுடையது. வடமேற்கு மூலையில் திருச்சுற்றுக்கு வெளியே தீர்த்தக் கிணறு உள்ளது. வடக்குத் திருச்சுற்றில் சண்டீசுவரி எழுந்தருளி யுள்ளாள். முன்மண்டபத்தில் மேற்கு நோக்கி நந்தியும் கொடிமரமும் உள்ளன. அர்த்த மண்டபத்தில் அம்பாள் சந்நிதிக்கு வலப்புறம் கிழக்குநோக்கி இலட்சுமி கணபதி அமர்ந்துள்ளார். கருவறையில் அருளாரமுதத்தை வாரி வழங்கிக் கொண்டு அன்னை குயிலமுதநாயகி நின்ற திருக் கோலத்தில் கிழக்குமுகமாக எழுந்தருளியிருக்கிறாள்.

அம்பாள் சந்நிதிக்குத் தென்கிழக்கில் மடைப்பள்ளி உள்ளது.

அம்பாள் கருவறை தனி விமானமுள்ளது.

### (இ) அருள்தரு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில்

இத்திருக்கோயில், அருள்தரு குயிலமுதநாயகி திருக் கோயில் திருச்சுற்றுடன் இணைந்துள்ள தனிக்கோயில். இதன் திருவாயில் இந்நாளில் தெற்கு முகமாக உள்ளது. இந்த வாயிலுக்குக் கிழக்கே வடக்குச்சுவரில், இத்தலத்துக் குரிய திருப்புகழ்ப்பாடல்கள் கல்வெட்டுச் செய்து 8.7.1962 இல் பதிக்கப் பெற்றுள்ளன. முன் மண்டபத்தில் வடக்குச் சுவரையொட்டித் தெற்கு முகமாக பாலசுப்பிரமணிய சுவாமி உள்ளார். அவருக்கு வலப்பக்கத்தில் ஒரு லிங்கேசு வரரும், இடப்பக்கத்தில் ஒரு லிங்கேசுவரரும் உள்ளனர். இந்த மண்டபத்தின் கிழக்கே அர்த்தமண்டபமும் கருவறை யும் உள்ளன. அருள்தரு சுப்பிரமணியசுவாமி நின்ற திருக் கோலத்தில் வள்ளியம்மையார், தெய்வயானையம்மை யார் இருவரோடும் மேற்குநோக்கி எழுந்தருளியிருக்கிறார். திருக்கோயில் மேற்குச் சுவரில் (இச்சுவர் பிற்காலத்தில்

அமைக்கப் பெற்றதாகலாம்) சந்நிதிக்குச் சாளரம் அமைந்துள்ளது. இதற்கும் மேற்கே சந்நிதி நோக்கி இவரது வாகனமாகிய யானையும் அடுத்து பலிபீடமும், கொடிமரமும் உள்ளன. இந்தயானை அழகிய வடிவமுடையது. இத்திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமான் அருணகிரிநாத சுவாமிகளின் திருப்புகழ்ப் பாடல் பெற்றவர். இக்கோயில் மூலவர் கருவறை தனி விமானம் உடையது.

## 2. (அ) அருள்தரு பைரவசுவாமி திருக்கோயில்

திருக்கொடுங்குன்ற நாதர் சந்நிதிக்கு நேர்கிழக்கே பதினாறு கால் மண்டபம் உள்ளது. அந்த மண்டபத்தின் வடக்கே படிக்கட்டு உள்ளது. அதற்கு மேலே புதிதாக எழுப்பப்பெற்ற இராஜகோபுரம் உள்ளது. இராஜகோபுர வாயில் திருநிலைக்கு இருபுறமும்-கிழக்கிலும் மேற்கிலும் நீண்ட மிகப் பெரிய கல்கட்டுமான மேல்தளம் உள்ளது. இராஜகோபுர நுழைவாயில் மண்டபத்தில் தெற்குமுகமாக வலம்புரி விநாயகர் உள்ளார். இவருக்கு வலப்புறம் பதினெட்டுப்படிகள் உள்ளன. ஆதலால் இவரைப் பதினெட்டாம்படி விநாயகர் என்று அழைக்கின்றனர். பதினெட்டுப் படிகளுக்கும் மேலே நேர்வடக்கே ஒருபடிக் கட்டு உள்ளது. இதற்கும் மேலே மலைச்சரிவின் மடியில் திருக்கோயில் சமதளம் உள்ளது.படியிலிருந்து நேர்வடக்கில் ஆலமர் செல்வர் சந்நிதி தெற்குமுகமாக உள்ளது. இந்த மூர்த்தி சனகாதி நால்வருடன் வீற்றிருக்கிறார். இதற்கு மேற்கே பைரவர் சந்நிதி தெற்கு முகமாக உள்ளது. பைரவர் சந்நிதியின் முன்மண்டபத்தின் முன்னால் உள்ள மேற்குத் தூணில் கிழக்கு முகமாகக் கருப்பர் சுவாமியும் கிழக்குத் தூணில் மேற்கு முகமாகச் சன்னாசிக்கருப்பர் சுவாமியும் உள்ளனர். இத்தூண்களுக்கிடையில் இந்தச் சுவாமிகள் இருவரின் ஆயுதங்களாகிய சூலம், அரிவாள்

முதலியன நிறுத்திவைக்கப் பெற்றுள்ளன; திருவடிகளும் உள்ளன.

பைரவர் சந்நிதி முக மண்டப வாயிலின் இருபக்கமும் துவார பாலகர்கள் உள்ளனர். இவர்களின் வடிவங்கள் தனித்தனியே ஒவ்வொரு கல்லில் வடிக்கப்பெற்ற அற்புத மான வடிவங்களாகும். மகாமண்டபத்தின் வடக்கே சந்நிதிக்குக் கிழக்குப்பக்கம் பைரவர் உற்சவமூர்த்தி உள்ளார். அர்த்த மண்டபத்திற்கு அப்பால் கருவறையில் நின்ற திருக்கோலத்தில் நான்கு திருக்கரங்களுடன் எழுந்தருளி அருள்பொழிந்து கொண்டிருக்கிறார் பைரவ சுவாமி. இவர் வலது திருக்கரங்களில் சூலமும் உடுக்கையும் இடது திருக்கரங்களில் நாகபாசமும் கபாலமும் கொண்டு விளங்குகிறார். இவர் அருளாற்றல் நிறைந்த மூர்த்தி ஆதலால் இவர் சந்நிதி புகழ்பெற்று விளங்குகிறது.

**(ஆ) அருள்தரு விசுவநாதர் திருக்கோயில்**

இத்திருக்கோயில், பைரவர் கோயிலோடு இணைந்து கருவறை, மேற்கே தனி விமானத்துடன் திகழ்கிறது. மகாமண்டபத்தின் கிழக்குப்பக்கம் வெளிப்புறச் சுவர் எழுப்பப் பெற்று அடைக்கப் பெற்றுள்ளது. அந்தச் சுவருக்குக் கிழக்கே விசுவநாதர் சந்நிதிக்குரிய நந்தி, பலி பீடம், கொடிமரம் ஆகியன உள்ளன. விசுவநாதர் சந்நிதிக்கு நேரே, அந்த வெளிப்புறச் சுவரில் சாளரம் அமைக்கப் பெற்றுள்ளது. விசுவநாதர் கிழக்கு நோக்கி உள்ளார். விசுவநாதர் சந்நிதிக்குத் தெற்கே விசாலாட்சி சந்நிதி உள்ளது. விசுவநாதர் கோயிலின் தென்பக்கம் ஆலமர் செல்வரும், வடபக்கம் சண்டீசுவரரும் உள்ளனர். இந்தத் தளத்தில் முன்னர்க் கூறிய ஆலமர் செல்வர் தனிச் சந்நிதிக்குக் கிழக்கே மடைப்பள்ளி உள்ளது. இவ்விரண்

டுக்குமிடையே அருள்தரு மங்கைபாக சுவாமி' திருக்கோயி லுக்குச் செல்லும் படிக்கட்டு உள்ளது.

**அருள்தரு மங்கைபாகர் திருக்கோயில்**

அருள்தரு மங்கைபாகர் திருக்கோயில் அந்தப் படிக் கட்டுக்கும் மேலே உள்ளது. இத்திருக் கோயிலின் தென் பகுதி மண்டபம் இலட்சுமி மண்டபம் எனப்படுகிறது. இந்த மண்டபத்தின் மேற்குச் சுவரையொட்டி கஜலட்சுமி திருவுருவம் கிழக்கு நோக்கி உள்ளது. கஜலட்சுமிக்கு வடக்கே சிறிய வடிவில் ஒரு விநாயகரும், பெரியவடிவில் ஒரு விநாயகரும் கிழக்கு முகமாக உள்ளனர். இவ்விரு விநாயகரும் வீற்றிருக்கும் தளம் கல்தளமாகும். இந்தத் தளக்கற்களின் நெற்றியில் - வரிசையாக நான்கு விநாயகர் திருவுருவங்கள் புடைப்புச் சிற்பங்களாக உள்ளன. இந்த விநாயகர் திருவுருவங்களில் ஒன்று நின்ற திருக் கோலமாகவும், இரண்டாவதாகவும் நான்காவதாகவும் உள்ளவை இருந்த திருக்கோலத்தனவாகவும் மூன்றாவ தாக உள்ளது நடனத் திருக்கோலமாகவும் உள்ளன.

இலட்சுமி மண்டபத்திற்குக் கிழக்கே உள்ள மண்டபம் ஆறுகால் மண்டபம். இது ஏகாந்த மண்டபம் எனவும் அழைக்கப் பெறுகிறது. இந்த மண்டபத்தின் சுவரில் மேற்கு முகமாகத் திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிய இத்திருத்தலத் திருப்பதிகப் பாடல்கள் கல்வெட்டுச் செய்து 14.2.1960 இல் பதிக்கப் பெற்றுள்ளன. இந்த மண்டபத்தின் வடபுறச் சுவரில் சிறிய வடிவில் ஒரு விநாயகர் தெற்கு முகமாகவும் உள்ளார். அவர் ஏகாந்த விநாயகர் எனப் பெறுகிறார்.

இந்த ஏகாந்த மண்டபத்திற்கு வடக்கே மூலவர் சந்நிதிக்கு நேரே ஒரு பெரிய மண்டபம் உள்ளது. இந்த மண்டபம் மாறவர்மன் சுந்தர பாண்டியனால் கட்டப் பெற்றதால் சுந்தர பாண்டியன் மண்டபம் எனப் பெறு

கிறது. இந்த மண்டபத்தின் தென்மேற்குப் பகுதியில் ஒரு குறட்டின் மீது வல்லபை விநாயகர் கிழக்கு முகமாக உள்ளார். இந்தக் குறடு, செம்பன் என்பவரால் கட்டு விக்கப் பெற்றதால் செம்பன் குறடு எனப் பெயர் பெற் றுள்ளது. இந்த மண்டபத்தின் வடக்குப்புறச் சுவரை யொட்டி, ஆடல் வல்லான் உற்சவமூர்த்தி, தென்முகமாக எழுந்தருளியுள்ளார். சுந்தரபாண்டியன் மண்டபத்தின் தென்பகுதி வாத்திய மண்டபம்; சந்நிதிக்கு நேரில் உள்ள நடுப்பகுதி நர்த்தன மண்டபம் எனப் பெறுகின்றன.

சுந்தரபாண்டியன் மண்டபத்துக்கு மேற்கே அருள் தரு மங்கைபாக சுவாமி சந்நிதி முக மண்டபத்துக்கும் இடையே உள்ளது தேவசபா மண்டபம். இந்த மண்டபம் கலைச் சிறப்புடைய அழகிய மண்டபம். இறைவன் - இறைவியின் திருமணக்கோலம் காண, தேவர்கள் கூடி யிருந்த இடம் இது என்பது ஐதிகம். இந்த மண்டபத்தின் வடபுறம் உள்ள மேடையில் திருஞானசம்பந்த சுவாமிகள், வள்ளல்பாரி இவர்களின் உற்சவத் திருவுருவங்கள் தென் முகமாக உள்ளன. வள்ளல்பாரி சிலைக்குமேலே சுந்தர மூர்த்தி சுவாமிகள் பாடியருளிய ''கொடுக்கிலாதானைப் பாரியேயென்று கூறினும் கொடுப்பாரிலை'' என்னும் திருப் பாடல் கல்வெட்டுச் செய்து 7.5.1968-இல் பதிக்கப் பெற் றுள்ளது. தேவசபா மண்டபத்தின் மேற்குச் சுவரில் சந் நிதிக்கு வலப்புறத்தில் "நல்லவும் தியவும் அல்ல" எனத் தொடங்கும் கபிலர் பாடல் 7.5.1968-இலும் இடப்புறத் தில் ''மேகத்திடி குரல்வந்தெழ'' எனத் தொடங்கும் திருப் பாடல் 5.4.1969 - இலும் கல்வெட்டுச் செய்து பதிக்கப் பெற்றுள்ளன.

தேவசபா மண்டபத்திற்கு மேற்கே அர்த்த மண்டபம் உள்ளது. அர்த்த மண்டபத்திற்கும் கருவறைக்குமிடையே மேடையமைந்த சந்நிதி முக மண்டபம் உள்ளது. இதற்

குத் தென் மேற்கே கற்பலகையில் செதுக்கப்பெற்ற அருள் தரு மங்கைபாகர் சுவாமியின் பிறிதொரு திருவுருவம் கிழக்கு முகமாக உள்ளது. இது அயலவர் படையெடுப்பின் போது, மூலவர் திருவுருவத்திற்கு மாற்றாகச் செய்து வைக்கப் பெற்றதெனக் கூறப்படுகிறது.

அதற்கு மேற்கு கிழக்கு நோக்கி உள்ளது குடைவரைக் கோயில். இந்தக் குடைவரைக் கோயில் விமானம் உடையது.

இந்தக் குடைவரை தூண் அமைப்பு இல்லாதது. நீண்ட சதுர வடிவில் அமைந்துள்ளது. அதன் வெளியே ஒரு சிறு முன் மண்டப அமைப்பையும் கொண்டுள்ளது. முன் மண்டபச் சுவரில், கருவறை நுழைவாயிலில் இரு பக்கங்களிலும் துவார சக்திகள் உருவங்கள் பாறையிலே செதுக்கப் பெற்றுள்ளன. கருவறைக்குள் குடைவரையைச் செதுக்கும் போதே பாறையிலேயே செதுக்கப்பெற்ற திருமேனி கொண்டு திருமணக் கோலத்தில் எழுந்தருளியிருக்கிறார் அருள் தரு மங்கைபாக சுவாமி. உலகத்தின் அழகெல்லாம் திரண்டு ஒருங்கிணைந்தாற் போல அகிலாண்டகோடிகளுக்கெல்லாம் அம்மையும் அப்பனுமாகிய முதல்வியும் முதல்வனும் திருமணக்கோலத்தில் எழுந்தருளியுள்ள திருக் காட்சி, காணற்கரிய திருவருட் காட்சி. உலக உயிர்களெல்லாம் உய்திபெற்றிட மங்கை பாகனாகிக் குன்றா இளமையும் அழகும் கொண்டு எழுந்தருளியுள்ள திருக்கோலம் இது. விழிகளில் உயிரைத் தேக்கி வைத்துக்கொண்டு பலகாலம் இமைக்காமற் பார்த்துக் கொண்டிருந்தாலும் தெவிட்டாத தேன்காட்சி இது! இந்த அம்மையப்பர் திருக்கோலமே, இறைவனின் தொன்மைக் கோலம் என்று தேனூறித் தித்திக்கும் திருவாசகம் பாடிப்போற்றுகின்றது.

"தோலும் துகிலும் குழையும் சுருள் தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்க வளையும் உடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ!"

என்பது திருவாசகம். திருத்தொண்டர் புராணத்தில் அடியார்களுக்கு நிகழ்ந்த அருளிப்பாடெல்லாம் இந்த அம்மையப்பர் திருக்கோலத்திலேயே நிகழ்ந்துள்ளன. ஆதலால் அவ் அருளிப்பாடு நிகழ்ந்த திருத்தலங்களிலெல் லாம் இத்திருவுரு எழுந்தருளியிருப்பது மங்கைபாகரின் ஒப்பில்லாப் பெருமைக்கு எடுத்துக்காட்டாகும்.

எல்லையற்ற பரம் பொருள், இத்திருத்தலத்தில் மங்கைபாகராய் எழுந்தருளி உலக உயிர்களுக்கெல்லாம் வற்றாது முற்றாது திருவருளை வாரி வழங்கிக் கொண்டி ருக்கிறார். அனைவரும் வழிபட்டு அருளாரமுதம் பருகி உய்தி பெறுவோமாக!

# தலக்கோயில்கள்

1. **பிடாரியம்மன் கோயில்:** இது ஊருக்கு வடக்கே யுள்ளது. இங்கு எழுந்தருளியுள்ள பிடாரியம்மனுக்கு ஆண்டு தோறும் சித்திரை மாதம் 10 நாள் திருவிழா நடைபெறுகிறது. இத்திருவிழா சித்திரை அமாவாசை நாளில் நிறைவடைகிறது.

2. **ஐயனார் கோயில்:** இது ஊருக்குத் தெற்கே உள்ளது. எங்கு எழுந்தருளியுள்ள ஐயனாருக்கு ஆண்டு தோறும் 10 நாள் பங்குனி உத்திரவிழா நடைபெற்று வருகிறது.

**3. அங்காள பரமேஸ்வரி கோயில்:** இது ஊருக்கு மேற்கே உள்ளது. இப்பிராட்டிக்கு ஆண்டுதோறும் மாசி மாதம் அமாவாசையன்று காப்புக் கட்டி 5 நாள் திருவிழாக் கொண்டாடப் பெற்று வருகிறது.

4. **சொக்கநாதர் கோயில்:** ஊருக்குக் கிழக்கே உள்ளது. இது மண்டப அமைப்பில் மேற்குச் சந்நிதி யுடைய கோயில். இலிங்கமூர்த்தி எழுந்தருளியுள்ளார். இது குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனத்துக் கோயில். நாள்தோறும் பூசனை நடைபெற்றுவருகிறது.

**5. பாலமுருகன் கோயில்:** இது மலை உச்சியில் ஆண்டுதோறும் மாசிமாதம் மகாசிவராத்திரி நாளில் இக்கோயிலுக்கு பால்குடம் எடுப்பு விழா மிகச் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

## தலப்பெயர்கள்

இத்திருத்தலத்திற்குப் பல காரணங்களால் பலபெயர் கள் வழங்கப் பெற்றுள்ளன.

**1. கொடுங் குன்றம்**

மேருவின் கொடுமுடி இம் மலையானதால் கொடுங் கிரி, கொடுங்குன்றம் எனப் பெறுகிறது.

**2. கடோரகிரி**

மகாமேருவின் கடோரம் என்னும் பெயர்பெற்ற சிகரம் மலையானதால் இப்பெயர் பெற்றது. கடோரா சலம் என்றும் பெயர்.

**3. பிரசண்டகிரி**

ஆதிசேடனுக்கும் வாயுபகவானுக்கும் இடையே ஏற்

பட்ட பலப்போட்டியால் வாயுபகவான் மேருவின் கொடு முடியை அதிவேகத்துடன் பெயர்த்தெடுத்து வரப்பெற்ற மலையாதலால் பிரசண்டகிரி எனப் பெயராயிற்று.

**4. உக்கிராசலம்**

இறைவியின் தவத்தால் அவள் சிரசில் தோன்றிய அக்கினிப் பிழம்பு உக்கிரலிங்கமாகி அதில் இறைவன் எழுந்தருளியிருப்பதால் உக்கிராசலம் எனப்பெயர் பெற்றது. உக்கிரகிரி எனவும் வழங்குவதாயிற்று.

**5. தென்கயிலாயம்**

திருக்கயிலாம் போலவே தென்திசைத் தலமாகிய இங்கு, தேவியுடன் சிவபெருமான் என்றும் பிரியா நிலையில் எழுந்தருளியிருப்பதால் தட்சிண கயிலாயம் என்னும் பெயர் வழங்கலானது. ‘‘தேடவண் கயிலாயம்’’ என்றும் இங்குள்ள கல்வெட்டு, இத்திருத்தலத்தைக் குறிக்கிறது. சிவாசலம் என்றும் பெயர்.

## மூர்த்திகள்

**1. கீழ்க்கோயில் (பாதாளம்)**

**இறைவன்:** திருக்கொடுங்குன்றநாதர், கொடுங்குன்றீசர், கடோரகிரீசர், உக்கிரகிரீசர், திருக்கொடுங் குன்றமுடைய நாயனார், திருக்கொடுங் குன்றத்து உடையார், குன்றாண்டார் என்னும் திருநாமங்களுடையவர்.

**இறைவி:** குயிலமுதநாயகி, அமிர்தேசுவரி என்னும் திருநாமங்களுடையவர்.

**சேயோன்:** சுப்பிரமணியர் என்னும் திருநாமமுடையவர். அருணகிரிநாத சுவாமிகளின் திருப்புகழ் பெற்றவர்.

**2. நடுப்பகுதிக் கோயில் (பூமி)**

1. பைரவ சுவாமி

இவர் மிகச்சிறந்த அருளாற்றல் உடையவர்.

2. விசுவநாதர் - விசாலாட்சியம்மை.

**3. மேற்கோயில் (கயிலாயம்)**

**இறைவன்:** மங்கை பாகர் எனும் திருநாமம் உடையவர். திருஞானசம்பந்த சுவாமிகளால் "நல மங்கை பாகத்தவன்" என்று போற்றப் பெற்றவர். "தேடவல்' கயிலாயத்து பரன் நயினார் நல்லமங்கை பாகர்" என்று கல் வெட்டில் குறிக்கப்பெறுகிறார்.

**இறைவி:** தேனம்மை.

# தலவிருட்சம்

இத்திருத்தலத்திற்குரிய தலவிருட்சம் **பலா.** வேறு இரண்டு மரங்கள் சிறப்பாகச் சொல்லப் படுகின்றன. ஒன்று **பேரில்லா மரம்.** இது மங்கைபாகர் கோயிலுக்கு மேல் மலைப்பாறையில் உள்ளது. அது இன்னமரம் என்று தெரியவில்லை. 'மற்றொரு மரம் **உறங்காப்புளி** மரம். இது கீழ்க்கோயில் வளாகத்திலுள்ள தேனாடி தீர்த்தத்தின் வடகரையில் உள்ளது.

# தீர்த்தங்கள்

இத்திருத்தலம் தீர்த்தச் சிறப்பு மிக்குடையது. திருக் கோயிற் பகுதியிலுள்ள தீர்த்தங்களன்றி மலைமேல் பல தீர்த்தங்கள் உள்ளன. தலபுராணத்தில் 108 தீர்த்தங்கள் சொல்லப்படுகின்றன. அவற்றுள் முக்கியமானவை இவை:

**தேனாடி தீர்த்தம்** (மது புஷ்கரணி)

இது மகத்தான பெருமையுடையது. திருக்கொடுங் குன்ற நாதர் சந்நிதிக்குக் கிழக்கேயுள்ளது. இத்தீர்த்தத் தில் ஆடிப் பெருமானை வழிபட்டால் மகப்பேறு, நோய் நீக்கம், செல்வம் முதலிய எல்லாப் பேறுகளும் எய்தலாம்.

**குஷ்ட நிவாரண தீர்த்தம்**

இது திருக்கொடு நாதர் சந்நிதியின் இடப்பக்கம் பாறையில் உள்ளது. தொழுநோயுற்ற புண்டரீக முனிவர் என்பார், இத்தீர்த்தத்தில் மூன்று நாள் மூழ்கியெழுந்து இறைவனை வழிபட்டு நோய் நிங்கினார். அதுமுதல் இந்தத் தீர்த்தத்திற்குக் ''குஷ்டாபகம்'' எனும் பெயர் உண்டா னது. இதில் குளித்து இறைவனை வழிபட்டால் எல்லாப் பிணியும் நீங்கும்.

**அம்பாள் தீர்த்தம்**

இது குஷ்ட நிவாரண தீர்த்தத்திற்கு வடக்கே பாறை யில் உள்ளது. இதில் குளித்து அம்மையை வழிபட்டால் எல்லாப்பேறுகளும் இனிது கிடைக்கும்.

**சுப்பிரமணியர் தீர்த்தம்**

அம்பாள் தீர்த்தத்திற்கு அடுத்து வடக்கே பாறையில் உள்ளது. இதில் மூழ்கியெழுந்து முருகனை வழிபட்டால் மூண்ட துன்பமெலாம் நீங்கிச் சுகம் பெறுவர்.

**பைரவ தீர்த்தம்**

இந்தத் தீர்த்தம் பைரவர்கோயிலுக்குப் பின்பக்கம் உள்ளது. இதில் மூழ்கி இறைவனை வழிபட்டால் எல்லாப் பேறுகளும் எய்துவர்.

**சித்த தீர்த்தம்**

இந்தத் தீர்த்தம் மலையின் சிகரத்தில் உள்ளது. அபூர்வமான மூலிகைகள் கலந்துள்ள இத்தீர்த்தத்தைப்

பருகினால் பிணிகள் நீங்குகின்றன. உடறுலுதி பெறுகின்றனர். இதற்கு அருகில் பல தீர்த்தங்கள் [சுனைகள்] உள்ளன. அவற்றில் குளிப்பவர் பிணிகள் நீங்கி அழகு பெறுவர்.

**குரு தீர்த்தம்**

இது மலையின் கிழக்குப் பகுதியில் உள்ளது. சந்திரனின் தோஷத்தால் பீடிக்கப்பட்ட குருவின் பத்தினி, இதில் நீராடி அத்தோஷத்தினின்றும் நீங்கினாள். வியாழக் கிழமையிலும், வெள்ளிக்கிழமையிலும், ரேவதி நட்சத்திரத்திலும் பரதாரம் விரும்பிய ஆடவரோ, பர ஆடவரை விரும்பிய பெண்களோ இத்தீர்த்தத்திலாடி இறைவனை வழிபட்டால் அத்தோஷம் நீங்கும் என்று தலபுராணம் கூறுகிறது.

**சோம தீர்த்தம்**

இது உக்கிரலிங்கத்தின் வடமேற்கில் உள்ளது. இதில் சப்த முனிவர்களின் பத்தினிகள் நீராடி இறைவனைப் பூசித்துப் பேறு பெற்றனர். இதில் குளித்து வழிபாடு செய்தவர் சகல செல்வங்களும் பெற்று, சிவப் பேறடைவர்.

**தண்டநீ தீர்த்தம்** (வேளார் குளம்)

இந்தத் தீர்த்தம் ஊருக்கு மேற்கே உள்ளது. சிவபெருமான் தன் தண்டத்தின் நுனியால் பூமியில் தோண்டப்பட்ட தீர்த்தம் இது. அதனால் தண்டநீ எனவும் தண்டத்தின் நுனியால் [கோடியால்] ஏற்பட்டதால் கோடி தீர்த்தம் எனவும் பெயர் பெற்றது. இக்காலத்தில் வேளார் குளம் என வழங்கப் பெறுகிறது. பைரவர் திருக்கோயிலைக் கட்டிய வாட்படைத் தலைவனான துவாரபதி வேளார் பெயரால் இது வேளார் குளம் என்று வழங்கப் பெற்று இருக்கலாம். இறைவன், இறைவி திருமஞ்சனத்துக்கு நாள் தோறும் இக்குளத்திலிருந்து யானை மீது தீர்த்தம் கொண்டு வரப்பெறுகிறது. தீர்த்தத் திருவிழா இங்கு நடை

பெறுகிறது. நாலாம் திருநாள் ஆதீன மண்டபப் படியன்று இதன் கிழக்குக் கரையில் உள்ள சங்கரலிங்க விநாயகருக்குச் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது. இத்தீர்த்தம் மிக்க சிறப்புடையது.

## சிற்பங்கள்

**மங்கைபாகர் குடைவரைக்கோயில்**

இந்தக் குடைவரைக்கோயில் மூர்த்தி, மங்கைபாகர் திருவுருவம் மிக அழகியது; உயிரோவியமாய்த் திகழ்கிறது.

**தேவசபாமண்டபம்**

மங்கைபாகர் சந்நிதியில் உள்ளது. அழகிய கலைச் சிறப்புடையது. இந்த மண்டபத்தூண்களின் மேலே உள்ள போதிகை அழகிய வேலைப்பாடுடையவை இந்த மண்டபத்தின் மேற்பரப்பிலுள்ள பாவுகற்பலகையில் அட்டைகள் செதுக்கி ஓர் அட்டைக்கும் பிறிதோர் அட்டைக்கும் இடையில் தேவர்களின் சிலைகள் புடைப்பாகச் செதுக்கப் பெற்றுள்ளன. இந்தப் புடைப்புச் சிற்பங்களில் பல கரணச் சிற்பங்கள் ஆடற்கலையில் முத்திரைகள் பல கொண்டு இலங்குகின்றன. நடுவில் உள்ள இலட்சுமி உருவம் அழகானது.

**சுந்தரபாண்டியன் மண்டபம்**

தேவசபாமண்டபத்துக்குக் கிழக்கே உள்ள சுந்தரபாண்டியன் மண்டபத்தின் நடுவில் உள்ள சந்நிதி வரிசைத் தூண்கள் நல்ல வேலைப்பாடுடையவை. தூண்களின் மேலே உள்ள போதிகைகள் கண்டு மகிழத்தக்கவை.

**திருக்கொடுங்குன்றநாதர் கோயில்திருச்சுற்று மண்டபங்கள்**

இந்தத் திருச்சுற்று மண்டபத்தூண்கள் கலைச் சிறப்புடையவை. தூண்களின் மீதுள்ள யாளி வடிவங்கள்,

போதிகைகள் வேலைப்பாடு நிறைந்தவை. நான்குபுறத் திருச்சுற்று மண்டபங்களும் இராமேசுவரத் திருச்சுற்றின் தோற்றப் பொலிவுடையவை. வடமேற்கு மூலையில் மேற் பரப்பிலுள்ள பாவுகற்களில் செதுக்கப் பெற்றுள்ள இராசிச்சக்கரம் அமைந்துள்ளது. இதற்கு வடக்கே மூன்று வளையக் கற்சங்கிலியும், தெற்கே ஒரு கல் வளையமும் தொங்குகின்றன. இதற்குத் தெற்கேயுள்ள மண்டபத் தூண்கள் இரண்டில் தூண்களின் கீழ்ப்பகுதி நெற்றியில் சிறுசாளரம் அமைந்து வெளியிலிருந்து விரலால் உருட்டி விடத்தக்கவாறு சாளரத்துக்குள்ளே கல்லுருண்டைகள் உருவமைக்கப் பெற்றுள்ளன.

## வழிபட்டோர்

1. **உமாதேவி:** இவர் தவமிருந்து வழிபட்டு இறைவனை மணந்தார்.
2. **நந்தி:** இவர் சிவசித்தர்களை ஏளனம் செய்ததால் சிவபெருமானின் சினத்திற்காளாகி, இத்தலத்தை வழிபட்டு, மீண்டும் சிவபெருமானை அடைந்தார்.
3. **உபமன்யு:** அம்பிகையால் சபிக்கப்பெற்று மிருக உடலடைந்து இத்தலத்தை வழிபட்டு முருகனால் சாப விமோசனம் பெற்றார்.
4. **சப்தமாதர்:** இறைவனை வழிபட்டுப் பேறு பெற்றனர்.
5. **வியாக்ரபாதர்:** தன் மகனாகிய உபமன்யு குழந்தையாக இருக்கும்போது பாலின்றி அழுதார். வியாக்ரபாதர் சிவபெருமானை

வழிபட்டு, பாற்கடலிலிருந்து பால் பெற்று உபமன்யுவுக்குத் தந்து துன்பம், நீங்கினார்.

6. புண்டரீகர்: தொழுநோய் வாய்ப்பட்ட இம் முனிவர், இங்குள்ள நீர்த்தத்தில் மூன்று நாள் குளித்து. இறைவனை வழிபட்டு நோய் நீங்கினார்.

7. குருபத்தினி: சந்திரனின் தோஷத்தால் பீடிக்கப் பட்ட இவள் தன் பதியின் அறிவுரைப் படி இங்குள்ள தீர்த்தத்தில் குளித்து, வழிபட்டுத் தோஷம் நீங்கினாள்.

8. இலக்குமி: திருமாலின் அறிவுரைப்படி. இலக்குமி இத்தலத்திலுள்ள தீர்த்தத்தில் குளித்து இறைவனை வழிபட்டுப் பேரழகும். விரும்பிய பயனும் பெற்றாள்.

9. சந்திரன்: இவன், குருபத்தினியை விரும்பியதால் காசநோயால் பீடிக்கப்பட்டான். இங்குள்ள தீர்த்தத்தில் 16 மண்டலங் கள் குளித்துத் திருக்கொடுங்குன்ற நாதரை வழிபட்டு நோய் நீங்கினான்.

10. சரசுவதி: சத்திய லோக சபையில் துர்வாசரால் சாபமிடப்பட்டு, அந்த சாபம் நீங்கும் பொருட்டுஇத்திருத்தலம்வந்து இறை வனை வழி பட்டு, திருமுருகன் ஆற்ற லால் சாபம் நீங்கினாள்.

11. பிரமன்: இத்திருத்தலத்து இறைவனை வழி பட்டு ஆயிரம் புதல்வர்களைப் பெற் றார். அந்தஆயிரம் புதல்வர்களுக்கும் திருமணம் செய்வித்தார்; புத்தவடி வம் பெற்றதன் பாவம் நீங்கினார்.

12. **திருமால்:** புத்தவடிவம் பெற்றதால் ஏற்பட்ட பாவத்தை இத்தலத்து இறைவனை வழிபட்டு நீக்கிக் கொண்டார்.

13. **நரசிம்மன்:** இவன் வடநாட்டு அரசன்; சிறந்த சிவபக்தன்; இங்குள்ள இறைவனை வழிபட்டு இழந்துவிட்ட தன் நாட்டை உரிமையாக்கிக் கொண்டான்.

14. **நாகராஜன்:** திருக்கொடுங்குன்ற நாதரை வழி பட்டுப் பேறு பெற்றான்.

15. **மகோதரமுனிவர்:** இத்தலத்தை வழிபட்டு இறைவன் அருள் பெற்றார்.

16. **உக்கிரபாண்டியன்:** இந்தப் பாண்டியன் இத்தலத்து நாயகருக்குத் திருவிழா எடுத்து வழிபட்டுப் பேறு பெற்றான்.

## புராண வரலாறு (சுருக்கம்)

இத்திருத்தலத்திற்குத் தலபுராணம், வடமொழி யிலுள்ள பிரமாண்ட புராணத்தில் 18 அத்தியாயங்களில் கூறப் பெற்றுள்ளது. இது தமிழில் மொழி பெயர்க்கப் பெற்று சிவத்திரு. கே. ஆபத்துத் தாரணய்யரால் 1941இல் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. அதன் சுருக்கம் இங்குத் தரப் பெறுகிறது.

**உக்கிரலிங்கத் தோற்றம்**

ஒரு காலத்தில் கயிலையில் உமாதேவியார், சிவபெருமாவிடம் கேட்டுத் தவநெறிகளை உணர்ந்து கொண்டாள்; தவம் செய்ய விரும்பி இத்தலத்திற்கு வந்து பாதாளக் குகையில், கடுந்தவம் இயற்றினாள். அப்போது அம்பிகை

யின் சிரத்தைப் பிளந்து கொண்டு வெளிப்பட்ட அக்கினிப் பிழம்பு தூண் போல் ஒளிமயமாய் நின்றது. இதன் கொடிய வெப்பத்தைத் தாங்க இயலாமல் அரிபிரமாதி தேவர்கள் நடுங்கினர். கயிலாயம் சென்று சிவபெருமானிடம் தெரிவித்தனர். சிவபெருமான் இத்தலத்திற்கு எழுந்தருளினார். தேவியின் தவாக்கினிப் பிழம்பு இறைவன் கருணையால் ஒளிமயமான லிங்கமாயிற்று. தேவி தன் திருக்கண்களால் இறைவனைத் தரிசித்து மகிழ்ந்தாள். தவாக்கினிப் பிழம்பு ஒளிமயமான லிங்கமானதால் அது உக்கிர லிங்கம் எனப் பெயர்பெற்றது. இந்த உக்கிரலிங்கத்தை அரிபிரமாதி தேவர்கள் வழிபட்டு உயர்ந்தனர்.

சப்தமாதர்களுக்குக் காட்சியளிக்கும்படி தேவி வேண்டிக் கொள்ள, சிவ பெருமான் பாதாள முகத்திற்கு வெளியே லிங்க வடிவமாய்க் காட்சியளித்தார். சப்தமாதர்கள் அதுபோது இறைவனுக்குரிய உபசாரங்கள் செய்தனர். அப்போது சிவபெருமான் உக்கிரலிங்கத்திற்கு வடக்கில் மூன்று திருவுருவத்துடன் சாட்சி தந்தார். ஒரு திருவுருவத்தில் பவழங்களும் மற்றொரு திருவுருவத்தில் இரத்தினங்களும் முத்துக்களும் பிறிதொரு திருவுருவத்தில் அமுதமும் உண்டாயின. சப்தமாதர்கள் இவையாவற்றையும் அவரவர் விருப்பப்படி மற்றவர்களுக்கு வழங்கினர். அம்பிகையின் அருளால், சிவபெருமான் அமுதபானம் அளித்தார். இதன் காரணமாக இங்கு எழுந்தருளியுள்ள அம்பிகை அமிர்தேசுவரி எனப் பெயர் பெற்றாள்.

பின், திருமாலின் முயற்சியால், பிரமாதி தேவர்கள் முன்பில் அமிர்தேசுவரி – உக்கிரேசர் திருக்கல்யாணம் நடைபெற்றது. இத்திருக் காட்சியைக் கண்டு வழிபட்டு அரிபிரமாதி தேவர்கள் உய்தி பெற்றனர்.

**பாதாள நடனம்**

சிவபெருமான் இத்திருத்தலத்தில், பாதாளத்திலும்

கடோரகிரித் தாழ்வரையிலும் இரத்தின சபையில் நடனமாடுகிறார்.

ஒரு காலத்தில் தேவியின் மகிழ்வுக்காகக் கயிலாயத்தில் சிவபெருமான் நடனமாடினார். தேவியும் பிரமாதி தேவர்களும் அட்டமாநாகங்களும் அந்த நடனத்தைக் கண்டு மகிழ்ந்தனர். அதுபோது, அட்டமாநாகங்களுள் ஒன்றாகிய வாசுகி, இறைவனை நோக்கி, பாதாளத்திலுள்ள மற்ற எல்லா நாகங்களும் இந்த நடனத்தைக் கண்டு மகிழுமாறு பாதாளத்தில் ஆடியருள வேண்ட, அவ்வேண்டுகோளைச் சிவபெருமான் ஏற்றருளினார். பாதாளத்தில் இறைவன் நடனத்திற்கு ஏற்ப நாகங்களெல்லாம் தத்தம் தலைமணிகளாகிய இரத்தினங்களைக் கொண்டு ஒளிமயமான அரங்கத்தினை அமைத்தன.

சிவபெருமான் இந்த இரத்தின சபையில் எழுந்தருளி, திருமாலும் பிரம்மாவும் தேவர்களும் வாத்தியங்கள் இசைக்க நடனம் ஆடினார். எல்லாரும் கண்டு இன்புற்றனர். இந்த இரத்தின சபையில் எப்போதும் இறைவன் தேவியோடு நடனம் செய்து கொண்டிருக்கிறார். இந்த இரத்தினசபை திருக்கொடுங்குன்ற நாதருக்குக் கீழே பாதாளத்தில் உள்ளது என்பது ஐதீகம்.

**கடோரகிரி உற்பத்தி - பைரவர் வருகை**

முற்காலத்தில் ஆதிசேடனுக்கும் வாயுபகவானுக்குமிடையே யார் வலிமையுடையவர் என்ற போட்டி எழுந்தது. அதனால் அவ்விருவரும் நூறு ஆண்டுகள் போர் புரிந்தனர். ஆதிசேடன் தனது ஒளிமயமான விரிந்த படங்களால் மகாமேருவின் சிகரங்களை மூடிக்கொண்டு வாயுபகவானை நோக்கி, ''வாயுவே! உனக்கு வலிமையிருந்தால் என்படங்களை விலக்கி இந்த மேருவின் சிகரங்களைப் பெயர்த்துச் செல்க!'' என்றார். இதைக்கேட்ட வாயுபகவான் மிகக் கோபம் கொண்டார்; தன் வியாபகத்

தைச் சுருக்கிக் கொண்டார்; மேருவின் சிகரத்தைத் தன் ஆற்றல் முழுதும் கொண்டு பெயர்க்க முயன்றார். இதனால், உலக முழுவதும் பரவியிருக்கிற காற்று அடங்கி விட்டது ஆதிசேடனுக்கும் வாயுதேவனுக்கும் இடையே தொடர்ந்து போர் நடந்தது அப்போது உலகங்களெல்லாம் உயிரற்றுப் போயின.

பிரம்மா அங்கு வந்தார். அவ்விருவரையும் நோக்கி, "நீங்கள் இருவரும் உலகத்திற்கு முக்கிய ஆதாரமாயுள்ளவர்கள். உங்களால் இப்பொழுது உலகம் கொல்லப்படுகின்றது; இந்தப்போர் வேண்டாம்!" என்று கூறி அமைதிப்படுத்த முயன்றார். இதனைக் கேட்ட வாயு பகவான், "மேருமலையின் சிகரத்தை நான் பெயர்க்காவிடில் எனக்கு அவமானம் ஏற்படும்" என்றார். ஆதிசேடன், "நாங்கள் இருவரும் நிச்சயித்துக் கொண்டு இந்தப்போர் நடக்கிறது; ஆதலால், விடமுடியாது" என்றார்.

பிரம்மா ஆலோசித்தார்; தேவர்கள் அனைவரையும் அழைத்தார்; ஆதிசேடனைத் துதி செய்யுமாறு கூறினார். தேவர்கள் ஆதிசேடனை நோக்கி, "நீதான் உலகிற்கு ஆதாரமானவன். உலகத்தைக் காக்கும் பொருட்டு மேருவின் கொடுமுடிகளை விட்டுவிடு!" என்று துதித்தனர். ஆதிசேடன் தேவர்களின் வேண்டுகோளைக் கேட்டு அந்தக் கொடுமுடிகளை விட்டான். வாயுபகவான் தன் முழு வலிமைகொண்டு அந்தச் சிகரங்களைப் பெயர்த்தார்; அவற்றுள் கடினமாகிய ஒரு சிகரத்தை அதிவேகத்துடன் தூக்கிக் கொண்டு வானவீதியில் சென்றார். அதனால் கடோரகிரிக்குப் பிரசண்டகிரி எனும் பெயர் ஏற்பட்டது.

இவ்வாறு தூக்கிக்கொண்டு வந்த இந்தக் கொடுமுடியின் பளுவைத் தாங்கமாட்டாமல் வலிமையற்று வாயுபகவான் ஆகாயத்திலிருந்து அதனை எறிந்தார்.

அக்கொடுமுடி சிவலிங்க வடிவில் பூமியில் விழ்ந்தது. இந்த மலை, மிக உயரமாக வானளாவி நின்றது. அதனால், சூரியனின் பாதை தடையுற்றது. இதனைக் கண்ட தேவர்கள் கவலை கொண்டு, கயிலையை அடைந்து சிவபெருமானை வணங்கி உண்மையை உரைத்தனர்.

யாவற்றையும் அறிந்த எம்பெருமானாகிய இறைவன் புன்முறுவல் பூத்து, பைரவரைத் தம்பக்கம் அழைத்தார். "அந்தக் கொடுமுடியை அந்த இடத்திலேயே நிறுவி சூரியனுக்கு வழியுண்டாக்கித் தருக!" என்று திருவாய் மலர்ந்தருளினார். பைரவர், கையில் சூலமேந்தி இந்த மலைக்கு அருகில் வந்தார்; சிகரத்தில் சூலத்தை நாட்டி அந்த மலையின் மூலத்தைப் பிளந்து வெளிவந்தார். அச்சமயம் உலகில் உள்ள மலைகளெல்லாம் ஆடின. பிறகு சூலத்தைக் கையிலேந்தி, புன்முறுவலோடு விளங்கினார் பைரவ மூர்த்தி!

பின், தேவர்கள் அனைவரும் அங்கே வந்து பைரவரைத் துதித்தனர். பைரவர் அங்கேயே எழுந்தருளி அருளினை வாரி வழங்கிக் கொண்டிருக்கிறார்.

இந்தக் கடோரகிரி சிவசக்தி வடிவமானது. அதனால் இத்திருத்தலம் மிகவும் மேன்மையானது. இதனை வழிபடுவோர் எல்லாப் பேறுகளையும் இனிது எய்துவார்.

**தென்கயிலாயம்**

ஆதிசேடனுக்கும் வாயுதேவனுக்கும் ஏற்பட்ட போரினால், மேருவின் கொடுமுடி வாயுதேவனால் பெயர்க்கப்பட்டபோது, ஆதிசேடன் தலையிலிருந்த ஒரு மணி, அந்தக் கொடுமுடியுடன் சேர்ந்து தவம் செய்து கொண்டிருந்த காலாக்கினிருத்திரன் முன்பில், சிவபெருமான் ஆணையால் விழ்ந்தது. அதைப்பார்த்த காலாக்கினிருத்திரன் அதன் அழகைக்கண்டு அதைச் சிவலிங்கமாகச்

செய்து பூசிக்க எண்ணி, கயிலாயத்துச்சியானைத் திண்மை யான எண்ணத்துடன் தியானம் செய்தார். தியான மகிமையால் அந்த மணி ஈசுவரத் தன்மையுடன் கயிலாய வடிவம் ஆகி கடோரகிரிக்கு மூலமாக அமைந்து விட்டது. அதுதான் தேவி எழுந்தருளியுள்ள இடம்; ஈசனின் நடன ஸ்தானம், அங்கு, தேவியுடன் பிரியாமல் பரமசிவன் இருப்பதால் இதற்குத் தென்கயிலாயம் என்று பெயர் ஏற் பட்டது. சிவாசலம் என்றும் இதற்குப் பெயர்.

## அறப்பணி மரபினர்

### அ) அருவியூர் நகரத்தார்

இத்திருக்கோயிலுக்கு வழிவழியாகத் தொண்டு பூண்ட மரபினருள் சிறப்புடையவர்கள் அருவியூர் நகரத்தார் சமூகத்தார். இவர்கள் அருவியூர் வடக்கு வளவு நகரத் தார், அருவியூர் தெற்கு வளவு நகரத்தார் எனப் பிற் காலத்தில் இருபிரிவினராயினர். இவ்விரு பிரிவினரும் அருவியூர் மகுட தன வணிக சமூகத்தினர் என்று அழைக்கப் பெறுகின்றனர்.

செவ்வூர் மல்லைச் சிற்றம்பலக் கவிராயர் மரபினர் மிதிலைப்பட்டி முத்துராமலிங்கக் கவிராயர்,

"சீர்திகழ்செம் பொன்மகுடம் தென்னருக்கும்
சோழருக்கும்
பார்புகழச் சூட்டியுயர் பண்புபெற்றோர் –
கார்நிகர்கை
பொன்அருவி யூர்வணிகர்''

என்று இப்பெருமக்களைப் போற்றிப் புகழ்ந்துள்ளார்; இக்குலத்தினர் வரலாறு நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாற்றோடு தொடர்புடையது. இக்குலத்தினர் பூம்பு

காரில் இருந்த காலத்தில் பாண்டியன், தன்னாட்டுக்கு நற்குடிகள் வேண்டுமென்று சோழனிடம் வேண்ட அவன் இக்குலத்தினரையும் பாண்டி நாட்டுக்கு அனுப்பினான் என்பது வரலாறு. சாலிவாகன சகாப்தம் 629 (கி.பி. 707) இல் இவர்கள் பாண்டி நாட்டிற்கு வந்தனர். காவிரிப்பூம் பட்டினத்தில் மேலத்தெரு ஆறுவழியாராக இருந்த இந்த வணிகப்பெருமக்கள் அரியூரை வாழ்விடமாகக் கொண்டும் பிரான்மலைக் கோயிலை வழிபட்டுக் கோயிலாகக் கொண்டும் வசிக்கலாயினர் எனவும் அறிகின்றோம். பிற் காலத்தில் ''அரியூர்ப்பட்டனம் சாலி வாகன சகாப்தம் 1210 (கி.பி. 1288) இல் கலகத்தில் அழிந்து போனதால் அங்கு வாழ்ந்திருந்த 64 வைசியர்களும் திசை தப்பிப்போய் மலையாளம் சேர்ந்து கோட்டாற்றங்கரையில் குடியிருப்பு அமைத்து, மரகத விநாயகருக்குக் கோயிலும் கட்டி, வழி பட்டு வருகிறார்கள்'' என்று நாட்டுக்கோட்டை நகரத் தார் வரலாற்றில் கூறப்பெற்றுள்ளது. இக்காலத்தும் இந்த அருவியூர் நகரத்தார் சமூகத்து மரபினர் கோட்டாற்றில் வாழ்ந்து வருவதாகத் தெரிகிறது. ஆயினும் அரியூர்ப் பட்டனம் கலகத்தால் அழிந்த காலத்தில் திசை தப்பிப் போனவர்களில் சிலகுடியினர் சில காலம் கழித்துப் பிரான் மலைப் பகுதியில் குடியேறியுள்ளனர் என்பதும் வரலாற்றுண்மை. இது, இக்காலத்தும் மரகத விநாயகர் பூசைக்கு ஆண்டுதோறும் பிரான்மலை வட்டகை அருவியூர் நகரத்தார் சமூகத்தினருக்கு அழைப்பு வருவதாக இச்சமூகத்தினர் கூறுவதால் உறுதியாகிறது.

இக்குலத்தினர் வாழ்ந்திருந்த அரியூர் எவ்விடத்தில் இருந்ததென அறியமுடியவில்லை. இவ்வூர் கல்வெட்டுக் களில் அரியூர் என்றும் அருவியூர் என்றும் குறிக்கப்பெற் றுள்ளது. பிரான்மலையிலுள்ள குலசேகரபாண்டியன் ஆட்சியாண்டு - 16 (கி.பி. 1226) கல்வெட்டு ''கேரள சிங்க வளநாட்டு அருவியூரான குலசேகரப்பட்டினம்'

(S.I.I Vol VIII. No. 440) என்றும், பிரான்மலையிலுள்ள சொக்கநாதர் கோயில் உள்ள கல்வெட்டு ''கேரள சிங்க வளநாட்டு அருவிமானகரமான குலசேகரப் பட்டினத்து நகரத்தோடும்'' (S.I.I. Vol. VIII No. 442) என்றும் குறிக்கின்றன. திருப்புத்தூர்க் கல்வெட்டுக்கள் ''கேரள சிங்க வளநாட்டு அருவியூரான குலசேகரப்பட்டணம்'' (167 1935-36) என்றும், ''அருவியூரான குலசேகரப்பட்டணம்' (112/1908) என்றும் கூறுகின்றன. இந்த அருவியூர் முதல் மாறவர்மன் குலசேகரபாண்டியன் காலத்தில் (கி.பி. 1268-1310) அவன் பெயரால் குலசேகரப்பட்டினம் என்று வழங்கப் பெற்றதாக அறிகின்றோம். இந்நகரம் சாலி வாகன சகாய்தம் 1210 (கி.பி. 1288) இல் கலகத்தால் அழிவுற்றது என்று நாட்டுக் கோட்டை நகரத்தார் வரலாறு கூறுகிறது. கி.பி. 1288இல் குலசேகரபாண்டியன் கொடிகட்டியாண்ட காலமாகும். எனவே, அருவியூர் நகரம் அழிவுற்றது எந்த ஆண்டு என்பது சிந்திக்கத்தக்கது.

குலசேகரபாண்டியனுக்குப்பின் வந்த அவன் மகன் சுந்தரபாண்டியன் தந்தையின் மீதிருந்த தீராச் சினத்தால் கி.பி. 1310இல் குலசேகரபாண்டியனைக் கொன்று பட்டத்திற்கு வந்தான். இந்தச் சுந்தர பாண்டியனும் மற்றொரு பாண்டியனான வீரபாண்டியனும் ஒரே காலத்தில் வெவ்வேறிடங்களில் இருந்து ஆட்சி புரிந்தனர். இவ்விருவருக்கும் நிகழ்ந்த போரில் தோல்வியுற்ற சுந்தரபாண்டியன் அலாவுதீன் கில்ஜியின் படைத்தலைவனான மாலிக் காபூரைத் தென்னாட்டின்மீது படையெடுத்து வருமாறு அழைத்தான். இது கி.பி. 1310 ஆம் ஆண்டின் இறுதியில் நிகழ்ந்தது என்று மகமதிய சரித்திர ஆசிரியன் ''வாசப்'' என்பவன் கூறியுள்ளான் என்பர் வரலாற்றாசிரியர். எனவே, சுந்தரபாண்டியனும் மாலிக்காபூரும் சேர்ந்து குலசேகரபாண்டியன் பெயரால் அமைந்திருந்த அருவி

மாநகரை கி.பி. 1310 இல் அழித்துவிட்டனர் என்பதே வரலாற்றுக்கு இசைந்ததாகும்.

"முன்னாள் இராசராசன் சுந்தரபாண்டிய தேவர் துலுக்கருடன் வந்த நாளிலே ஒச்சூடுடையாரும் இவர் தம்பிமாரும் அனைவரும், அடியாரும் ...... செத்துங் கெட்டும் போய் அலைந்து, ஊரும் வெள்ளத்தாலும் கலகத்தாலும் பாழாயிருக்கிற அளவிலே" (S.I.I. Vol. VIII No. 247) என்பது கல்வெட்டுச்செய்தி. இது அக் காலத்து நிகழ்ந்த பேரழிவை அறிந்து கொள்ளக் கிடைத்த பதச்சோறாகும்.

இந்த அருவியூர் நகரத்தார் பிரான்மலைக் கோயிலை வழிபடு கோயிலாகக் கொண்ட குடியினராதலால், அருவியூர் பிரான்மலைக்கு அண்மையிலேயே இருந்தது என்பது உறுதி. டாக்டர். ஜெயபாரதி, "அருவியூர், சிங்கம்புணரியிலிருந்து கிழக்கே 2கி.மீ. தொலைவில், காளாப்பூரிலிருந்து தெற்கே 2கி.மீ. தொலைவில் உள்ள இடத்தில் இருந்திருக்கலாம்" (தினமணி 2.10.1986 - மலேசிய நாடு) என்று கருதுகிறார் என்பது குறிக்கத்தக்கது.

பிரான்மலைத் திருக்கோயிலில் நடைபெற்றுவரும் சித்திரைத் திருவிழாவில் ஐந்தாம் திருநாள் அருவியூர் தெற்கு வளவு நகரத்தார்களாலும், ஆறாம் திருநாள் அருவியூர் வடக்கு வளவு நகரத்தாராலும் நடத்தப் பெறுகின்றன. இதற்கு ஆதாரமாகப் பிரான்மலையிலுள்ள சுப்பிரமணிய சுவாமி திருக்கோயிலில் உள்ள மாறவர்மன் குலசேகரபாண்டியனின் 16ஆம் ஆட்சியாண்டு (கி.பி.1226) கல்வெட்டு இங்குத் தரப் பெறுகிறது.

"........திருக்கொடுங்குன்றமுடைய நாயினார் கோயில் தேவகன்மி, ஸ்ரீமாகேஸ்வரக் கண்காணி செய்வார் கோயிற் கணக்கராம் கேரள சிங்க வளநாட்(டருவியூ)(ர)ரான குல

சேகர பட்டினத்துக் கொல்லுருடையான் உய்ய நின்றாடுவான் மயிலேறும் பெருமாளான நயபாலற்குப் பிடிபாடு பண்ணிக் கொடுத்த பரிசாவது. இக்கோயிலுக்கு திருவீதியில் எழுந்தருள இளைய பிள்ளையாரில்லாமையால் பிள்ளையாரையும் நாச்சிமாரையும் எழுந்தருள்வித்துத் தா(ம)ம் அழுதுபடி சபித்துபடி திருநாள் தேவையுள்ளிட்டமையும் சிரிபண்டாரத்திலே செலுத்துகிறோமென்று இவற்கு பிடிபாடு முன்பே குடுத்து இவரும் இளைய பிள்ளையார் அழகிய பெருமானையும் (நா)ச்சி மாரையு(ம்) எழுந்தருள் வித்துக் கொண்டு....டயும் பண்ணுவிக்கையில் அழுதுபடியும் முன்பு த(ள)... (த்) தும்படி சி பண்டாரத்துக்கு திரு(முதல்) தரவேணுமென்று சொ.... பக்க லெ சி பண்டாரத்துக்கு இரு நூறு பணம் ஒடுக்குவித்துக்...டு இந்நாள் முதல் திருநாவுக்கரசு நாழியால் நாள் ஒன்றுக்கு நா...சியுங் கறியமுது விஞ்சனமும் திருவிளக்கும் சாத்துப்படியும் க........தாமமும் திருவீதியில் எழுந்தருளு(ம்)மிடத்து ஆளுந்திரு நாளு .....ழிச்சியும் எழுந்தருள்விக்கவும் இப்படி இந்நாள் முதல் சந்... ...தவற் செலுத்துவோமாக'' (S.I.I. Vol VIII No. 440).

இக்கல்வெட்டு, அருவியூர்க்கொல்லுருடையான் உய்ய நின்றாடுவான் மயிலேறும் பெருமாளான நயபாலன் என்பாருக்கு, திருக் கோயிலார் செய்து கொடுத்த பிடி பாட்டைக் குறிக்கிறது. இந்தப்பிடி பாட்டின்படி மேற்படி நயபாலன், சுப்பிரமணியர், வள்ளி, தெய்வயானை ஆகியோருக்கு உற்சவமூர்த்தி செய்வித்து, ஆறாம்திருநாள் மண்டபப்படி பெற்று - இதற்காகத் திருக் கோயில் ஸ்ரீபண்டாரத்தில் இருநாறு பணம் திருமுதலாக ஒடுக்குவித்தான் என்பதும் திரு நாவுக்கரசு திரு நாழியால் அரிசியும், பிற செலவுகளையும் ஏற்றுக் கொண்டான் என்பதும் இக்கல்வெட்டால் அறியக்கிடக்கிறது. இந்தப்

பிடிபாட்டின் வழியில்தான் இக்காலத்திலும் அருவியூர் நகரத்தார் ஆறாந்திருநாள் மண்டபப்படி நடத்தி வருகின்றனர் என்று கருதலாம்

ஏறத்தாழ 700 ஆண்டுகளாக இந்த அருவியூர் நகரத்தார் சமூகத்தார் இத்திருக்கோயிலை வழிபடு கோயிலாகக் கொண்டு வழிவழியாகத் திகழ்ந்து வருகின்றனர். மங்கை பாகரும் இக்குளத்தினருக்கு அருளை வாரி வழங்கிக் கொண்டிருக்கிறார்.

**ஆ) மதகுப்பட்டி கிராமம் முத்துராஜா சமூகத்தினர்**

இவர்கள் இத்திருக்கோயில் காவற்பணிக்காக, சிவகங்கைக்குப் பக்கத்து ஊராகிய மதகுப்பட்டியிலிருந்து பிரான்மலைக்குக் குடி பெயர்ந்து வந்த எட்டுக்குடும்பத்தினரின் வழியினர். இன்று குடும்பங்களுக்கு மேல் விருத்தியாகி இத்திருக் கோயிற் பணி செய்து வருகின்றனர். பலதலை முறைகளுக்கு முன் வந்து பிரான்மலை கிராமத்திற்குத் தென்பால் குடியிருப்பு அமைத்துக் கொண்டனர். இந்தக் குடியிருப்பு-மதகுப்பட்டியிலிருந்து வந்தவர்களின்குடியிருப்பு ஆதலால், மதகுப்பட்டி என்றே அழைக்கப் பெறுகிறது.

இந்தச் சமூகத்தினர், பைரவரைக் குல தெய்வமாகக் கொண்டவர்கள்; பிரான்மலைத் திருக்கோயில் காரியங்களுக்கு வழிவழியாகக் கறவைமாடுகள் வைத்துப் பால் வழங்கி வருபவர்கள்; கோயிலுக்குத் தவிர, வேறுயாருக்கும் இவர்கள் பால் வழங்கு வதில்லை; அப்படி வழங்கினால் கறவை மாட்டின் மடிக்காம்பு இரத்தச்சிவப்பாகி விடுவதாக இச்சமுகத்தினர் கூறுகின்றனர். பாலை மோராக்கி விற்பனை செய்கிறார்கள். வெண்ணெயும் விற்பனை செய்வதில்லை. அதை உருக்கி நெய்யாக விற்பனை செய்கிறார்கள். இவர்கள், பைரவருக்குப் பால்குடத்திரு விழா சிறப்பாக நடத்துகிறார்கள். திருக்கோயிற் காவற் பணியை தம் குடும்பங்களுக்குள் முறைவைத்துக்

கொண்டு செய்து வருகின்றனர். கோயில் காவலை வாழ்வாகக் கொண்டுள்ள இச்சமூகத்தினருக்கு, கோயில் இறைவன் காவலாக இருந்து அருள் செய்து வருகின்றான்.

**பிரான்மலை மற்றும் சுற்றுக் கிராமத்தார்கள்**

பிரான்மலைக் கிராமத்தினரும், பிரான்மலை வட்டகையிலுள்ள இருபதுக்கு மேற்பட்ட கிராமத்தினரும் இத்திருக்கோயிலுக்கு வழிவழியாகத் தொண்டுரிமை பூண்டவர்கள்; இவர்கள் திருக்கோயில் தேர்வடம் பிடித்தல் திருவிழாப்பணிகளில் பங்கேற்றல், அன்றாடத திருப்பணிகளை அன்புடன் ஏற்றுச் செய்தல் முதலிய இறைபணிகளை முட்டாது செய்து வரும் முறையால் சிறந்தவர்கள். எல்லார்க்கும் அருளும் இறைவன், இந்த நல்லார்களுக்கும் அருள்கின்றான் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

## நாள் வழிபாடு

இத்திருக் கோயிலில் நாள் தோறும் சிவாகமமுறைப்படி பின் வருமாறு காலபூசை நடைபெற்று வருகிறது.

திருக் கொடுங்குன்றநாதர் திருக்கோயில்
(காமிகாகம முறை)

| | | | |
|---|---|---|---|
| காலை | 5. 30 | மணி | - திருவனந்தல் |
| ,, | 6. 00 | மணி | - விழாபூசை |
| ,, | 8. 00 | மணி | - காலசந்தி |
| பகல் | 12. 00 | மணி | - உச்சிக்காலம் |
| மாலை | 6. 00 | மணி | - சாயரட்சை |
| இரவு | 8, 00 | மணி | - அர்த்த சாமம். |

மங்கைபாகர் திருக்கோயில்
(காரணாகம முறை)

| | | | |
|---|---|---|---|
| காலை | 8. 00 | மணி | - காலசந்தி |
| பகல் | 12. 00 | மணி | - உச்சிக் காலம் |
| மாலை | 6. 00 | மணி | - சாயரட்சை |
| இரவு | 8. 00 | மணி | - அர்த்தசாமம். |

## திருவிழாக்கள்

**சித்திரை:** சித்திரைத் திரு விழா. சித்திரா பௌர்ணமியை யொட்டிப் பத்து நாள் நடை பெறுகிறது இவ்விழா. இரண்டாம் திரு நாள் திரு ஞானசம்பந்தர் விழா. திரு ஞானசம்பந்தர் ஞானப்பாலுண்ணும் நிகழ்ச்சி தொடங்கி, இத் திருத்தலம் வரும் வரை நிகழ்ந்த வரலாற்று நிகழ்ச்சிகள் இத்திரு நாளில் நடைபெறுவது குறிப்பிடத் தக்கது. நான்காம் திருநாள் திருவண்ணாமலை ஆதீனம் மண்டபப்படி நடைபெறுகிறது. 5,6 ஆம் திரு நாள்களில் வள்ளல் பாரி விழா நடை பெறுகிறது. ஒன்பதாம் திரு நாள் தேர்த் திருவிழா, பத்துத் திருநாள்களிலும் ஐம் பெருங் கடவுளர் திரு வீதி உலா நடை பெறுகிறது.

**ஜெயந்தன் பூசை:** சித்திரைத் திங்கள் பரணி நாளில் பைரவருக்கு ஜெயந்தன் பூசை நடை பெறுகிறது. பைரவருக்குப் பால் குடம் எடுப்பு விழாவும் மாலை பைரவர் திருவீதியுலாவும் நடைபெறுகின்றன.

**ஆவணி:** ஆவணி மூலம் பிட்டுத் திருநாள் நடை பெறுகிறது. மதுரையில் இறைவன் பிட்டுக்கு மண் சுமந்து உழைப்பின் பெருமையை உலகுக்கு உணர்த்திய திருநாள் இது. ஆதலால், இவ்விழா சமுதாயப் பணி விழாவாக- உழைப்புத் திருவிழாவாக இங்கு நடைபெறுகிறது. இன்று

காலை இறைவன் கொற்றாள் திருக்கோலத்துடன் ஏரி, குளம், வரத்துக்கால்கள் இவற்றில் தேவையான ஓரிடத்திற்கு எழுந்தருள்கிறார். பொதுமக்கள் மண்வெட்டி, கூடையுடன் சீர் செய்யும் உழைப்புப்பணி செய்கின்றனர். இப்பணியில் ஈடுபடும் அனைவருக்கும் பிட்டும் மதிய உணவும் வழங்கப் பெறுகின்றன. பணி நிறைவேறியதும் அன்று இரவு இறைவன் திருக்கோயிலுக்கு எழுந்தருள்கிறார்.

**விநாயக சதுர்த்தி:** இன்று விநாயகருக்குச் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது. இரவு விநாயகர் திருவீதியுலா நிகழ்கிறது.

**கார்த்திகை:** திருக்கார்த்திகை நாளில் மலை தீபக் காட்சிநடைபெறுகிறது. இன்று வள்ளி தெய்வயானையுடன் சுப்பிரமணியரும், விநாயகரும் எழுந்தருள்கின்றனர். சொக்கப்பனை கொளுத்தி, திருவீதி உலா நடை பெறுகின்றது.

**மார்கழி:** திருவாதிரைத் திருநாளில் நடராசப் பெருமானுக்குச் சிறப்பு வழிபாடு நடக்கிறது. நடராசர் சிவகாமி அம்மையாருடன் கேடகத்தில் எழுந்தருளித் திருவீதி உலா வருகிறார்.

**தை:** தைப்பூச நாளில் இறைவனுக்குச் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது. விநாயகர், சுப்பிரமணியர் இருவரும் கேடகத்தில் எழுந்தருள இவ்வூருக்குப் பக்கத்திலுள்ள பள்ளப்பட்டி ஆற்றில் தீர்த்த விழா நடைபெறுகிறது.

**சுனை விழா:** சுனை விழா என ஒருவிழா இவ்வூர் மக்களால், மேற்குப் பக்க மலையில் உள்ள சுனையில் நடைபெற்று வருகிறது. அந்தச் சுனைக்குப் பூசனை நடைபெறுகிறது. திருக்கோயில் இந்த பூசனைக்குரிய பொருட்களை வழங்குகிறது. இந்த விழாவில் சாமியாட்டம்

முதலிய நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. சுனையையே வழிபடும் இவ்விழா ஒரு சிறப்பான விழாவாகும்.

## சிறப்பு வழிபாடு

ஆனிமாதம் நடராசப் பெருமானுக்குத் திருமஞ்சனம் சிறப்பு வழிபாடும், புரட்டாசி மாதத்தில் நவராத்திரி 10 நாள் கொலு வழிபாடும், கார்த்திகை மாதம் சஷ்டியன்று பைரவருக்குச் சம்பக சஷ்டி சிறப்பு வழிபாடும்,மாசிமாதம் மகா சிவராத்திரியன்று இரவு திருக்கொடுங்குன்ற நாதருக்கும், மங்கைபாகருக்கும் நான்கு காலம் சிறப்பு வழிபாடும் நிகழ்ந்து வருகின்றன.

## வள்ளல் பாரிவிழா

வரலாற்று நாயகர்களை நினைவு கூர்வது எதிர்கால வரலாற்றுக்கு எழுச்சியும் ஏற்றமும் தரும் என்பது அருள் நெறித் தந்தையவர்களின் திருவுள்ளம். எனவே, தமது ஆதீன நிர்வாகத்தில் உள்ளதும், முல்லைக்குத் தேரீந்த வள்ளல் பாரி வாழ்ந்திருந்ததுமாகிய இப் பறம்பு மலையில் சித்திரைத் திருவிழாக் காலத்தில் வள்ளல்பாரி விழா நடத்தத் திருவுள்ளம் கொண்டார்கள். 1954 முதல் இவ் விழா இரண்டு நாள் விழாவாக இங்குச் சிறப்பாக நடைபெற்று வருகிறது. இது புகழ்பெற்ற சங்க இலக்கிய விழாவாகும்.

முதல் நாள் காலை, வள்ளல் பாரியின் சிலையைத் தேரில் எழுந்தருள்வித்துத் தாரை தப்பட்டைகளுடன் மலைப் புறத்துக்கு வேட்டையாடச் செல்வர். வேட்டை நிகழ்ந்த பின் திரும்பிவரும் வழியில் ஔவை நுழைவாயிலில் வள்ளல்பாரி முல்லைக்குத் தேர் வழங்கும் நிகழ்ச்சி நடைபெறுகிறது.

அதன்பின் வள்ளல்பாரி குடிமக்களுக்குப் படியரிசி வழங்கும் நிகழ்ச்சி நடைபெறுகிறது.

பின், கபிலர் அரங்கத்தில் வள்ளல்பாரி விழா சங்கத் தமிழ் விழாவாக இரண்டு நாள்கள் காலையும் மாலையும் நடைபெறுகிறது. இவ்விழாவில் உரையரங்கம், கருத் தரங்கம், கவியரங்கம், பட்டிமன்றம் பாராட்டுவிழா முதலியன நடைபெறுகின்றன. இரண்டாம் நாள் மாலை பாராட்டுவிழா, வள்ளல்பாரி அவைக்களமாக நிகழ்கிறது. வள்ளல்பாரியாகத் தகுதிமிகுதியுடைய பெருமகனார் ஒருவர் அமர்ந்து நடத்துகிறார். அதுபோது ஆடுநர் பாடு நர்க்குப் பரிசில் வழங்கல், தமிழ்ப்புலவர்களுக்குப்புத்தாடை வழங்கல், முந்திய ஆண்டுகளில் இந்தப்பாரியின் அவையில் பாராட்டுப் பெற்றவர்களுக்குப் பட்டாடை போர்த்தல் முதலியன நிகழ்கின்றன. அதன்பின் தக்க அறிஞர்களுக்கும், கலைஞர்களுக்கும் பாராட்டு நிகழ்கிறது. இவையனைத்தை யும் வள்ளல்பாரியாக வீற்றிருக்கும் பெருமகனாரே செய் கிறார். பின் கலை நிகழ்ச்சிகளுடன் விழா நிறைவெய்து கிறது.

இவ்விழா 1954 முதல் நடைபெற்று வருகிறது. முதலாண்டு விழாவில் வள்ளல் பாரியாக அமர்ந்து நடத்தி யவர் வள்ளல் டாக்டர் அழகப்பராவார். அதன்பின் வள்ளல்பாரியாக அமர்ந்து சிறப்பித்தவர்கள் பலர். அவர் களுள் டாக்டர் கலைஞர், டாக்டர் நாவலர் இருவரும் குறிப்பிடத்தக்கவர்கள்.

பாராட்டுப்பெறும் அறிஞர்களில் ஆடவர்க்குக் கபிலர் பெயராலும் மகளிர்க்கு ஔவையார் பெயராலும் பட்ட மும் பாராட்டும் வழங்கப் பெறுகின்றன. முதலாண்டு (1954) பாராட்டுப் பெற்றவர் அறிஞர் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் ஆவார். அதன்பின் நிகழ்ந்த விழாக்களில் பாராட்டுப் பெற்றவர்கள் எண்பதுக்கு மேற்பட்டவர்கள்.

அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள், க. வெள்ளை வாரணனார், மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர், ஞா. தேவநேயப்பாவாணர், திருவாசகமணி கே.எம். பாலசுப்பிரமணியம், ப. இராமநாதபிள்ளை, வ. சுப. மாணிக்கனார், தமிழண்ணல், ஔவை நடராசன், சிலம்பொலி சு. செல்லப்பன், அகிலன், ஜெகசிற்பியன், நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன், பத்மா சுப்பிரமணியம், முடியரசன், புலவர் கா. கோவிந்தன், முனைவர் சி. பாலசுப்ரமணியம் முதலியோராவர்.

வள்ளல் பாரிக்கு எடுக்கும் இத்தமிழ்விழா மக்களிடையே சங்கத் தமிழுணர்வை ஏற்படுத்தியுள்ளது; அறிஞர்களைப் பாராட்டுவதன் மூலம் அவர்கள் பணியை ஊக்குவித்துள்ளது; பாரியின் குணநலன்களைப் பரப்பி பண்பாட்டு மறுமலர்ச்சிக்குத் துணைசெய்துள்ளது; பறம்பு மலையின் பெருமையைப் பைந்தமிழ் நாடெலாம் அறியச் செய்துள்ளது.

## நிர்வாகம்

திருக்கொடுங்குன்றம் என்னும் இந்தப் பிரான்மலைத் திருக்கோயில், பிரான்மலை வகை ஐந்து கோயில் தேவஸ்தானங்களில் ஒன்றாகும். குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனகர்த்தர்கள் இந்த ஐந்துகோயில் தேவஸ்தானங்களின் பரம்பரை அறங்காவலராவார்கள்.

இந்த ஆதீனத்தின் குருமுதல்வர் திருவருள் திரு. தெய்வ சிகாமணி தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் திருவண்ணாமலையில் அவதரித்தவர்கள்; கி.பி. 1310 ஆம் ஆண்டளவில் இத்திருமடத்தை அவர்கள் நிறுவினார்கள். பின் ஜீவசமாதியாகித் திருவண்ணாமலையிலேயே கோயில் கொண்டுள்ளார்கள். 16 ஆவது குருமூர்த்திகள் காலம்.

வரை திருவண்ணாமலையில் இந்த ஆதீன கர்த்தர்களின் அருளாட்சி நிலவியது. 17ஆவது குருமூர்த்திகள் நாகலிங்க, தேசிக சுவாமிகள் சேதுயாத்திரைக்கு எழுந்தருளி பாண்டிய நாடு வந்து திருச்சுழியலில் தங்கினார்கள். இச்செய்தி யினைக் கேட்ட சேதுபதி மன்னர் இரகுநாத சேதுபதி (கி.பி. 1675-1710) மட்டிலா மகிழ்ச்சி கொண்டார். நமது குருமூர்த்திகளின் பெருமையைத் தெரிந்தவர் மன்னர். ஆதலால், உடனே திருச்சுழியலுக்கு வந்து குருமூர்த்தி களைக் கண்டு கொண்டு திருவடிகளில் வீழ்ந்து வணங்கி னார். இராமேசுவரத்திற்கு எழுந்தருள வேண்டும் என்ற குருமூர்த்திகளின் விருப்பத்தை அறிந்த மன்னர் உடனே அதற்கு ஆவன செய்தார். மன்னரும் ஏவலாளர்களும் புடைசூழ, குருமூர்த்திகள் இராமேசுவரம் சென்று தீர்த்த மாடி இறை வழிபாடு செய்து கொண்டு திரும்பினார்கள். இவ்வாறு திரும்பிவரும் காலத்தில் மன்னர், இந்தச் சீமை யிலேயே சுவாமிகள் தங்கி அருளாட்சி புரிய வேண்டும் என்று வேண்டிக் கொண்டார். பொன்னும் மணியும் காணிக்கையாகச் செலுத்தினார். பிரான்மலை, (இதன் உட்கிடைக்கோயிலான சதுர்வேதமங்கலம்) திருப்புத்தூர், திருக்கோளக்குடி, தேனாச்சியம்மன் கோயில், குன்றக்குடி ஆகிய திருக்கோயில்களின் அறங்காவற் பொறுப்பை பரம்பரையாக ஏற்க வேண்டித் தந்தார். மன்னரின் வேண்டுதலை, குருநாதர் கருணையுடன் ஏற்று கி.பி. 1690ஆம் ஆண்டில் பிரான்மலையில் காளத்திநாதரை எழுந்தருள்வித்துக் கொண்டு அருளாட்சி புரியத் தொடங்கினார்கள். இவ்வாறு பிரான்மலையில் தொடங்கி நடந்து வந்த அருளாட்சிக் காலத்தில் பிரான் மலையில் ஆதீனத் திருமடம் நிறுவப்பெற்றது. கி.பி. 1690 முதல் பிரான்மலைவகை ஐந்து கோயில்களுக்கும் வழிவழி அறங்காவலர்களாக இந்த ஆதீனகர்த்தர்கள் இருந்து அருளாட்சி செய்து வருகிறார்கள்.

மருதுபாண்டியர் குன்றக்குடித் திருக்கோயிலைப் பெரிய அளவில் விரிவுபடுத்தித் திருப்பணி செய்வித்து, குன்றக்குடிக்குத் தனிப்பெருமை உண்டாக்கினர். அக்காலத்தில் (கி.பி 1778) மருது பாண்டியர் வேண்டுகோளுக்கு இணங்க, இந்த ஆதீன கர்த்தர்கள் குன்றக்குடிக்கு எழுந்தருளி அங்கே தங்கினர். குன்றக்குடியில் திருமடமும் அமைந்து விளங்கி வருகிறது. இக்காலத்தில் இந்த ஆதீனத்தின் 45 ஆவது மகாசந்நிதானமாக எழுந்தருளியிருப்பவர்கள் (தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள்) பரம்பரை அறங்காவலராக இருந்து இத்திருக்கோயில் நிர்வாகம் செய்தருளி வருகிறார்கள்.

## திருப்பணிகள்

திருக் கொடுங்குன்றமாகிய இந்தப் பிரான்மலைத் திருக்கோயில் முதன் முதலில் யாரால் கட்டப் பெற்றது என்பது தெரியவில்லை. திருஞான சம்பந்த சுவாமிகள் இத்திருத்தலப் பதிகத்தில் 'பழநகர்' என்று பாடியுள்ளார். இது முதுகுடுமிப் பெருவழுதி காலத்தில் இருந்த சிவனுறையும் கோயில் "முக்கட் செல்வர் நகர்" எனப் புறநானூறு பேசுகிறது. 'முக்கட் செல்வர் நகர்' என்பது முக்கட் செல்வர் திருக்கோயில் என்று உரையாசிரியன்மார் பொருள் கொண்டுள்ளனர். எனவே, திருஞானசம்பந்தர் காலத்தில் 'பழைய கோயில்' இத்திருத்தலத்தில் இருந்தது என்பது அவர் வாக்கால் தெரிகிறது. வேறொரு பாடலில் 'பெருநகர்' என்று குறிப்பிடுவார் சம்பந்தப் பெருமான். எனவே, அப்பர் பெருமான் குறிப்பிடும் பழைய காலத்து எண்வகைக் கோயில்களில் ஒன்றான பெருங்கோயில் வகையைச் சேர்ந்த கோயிலாகவும் இருந்திருக்கலாம். பெருங்கோயில்என்பது செய் குன்றுகள் மேல் எடுப்பிக்கப்பெற்றது

இதனை மலைக் கோயில்கள் எனவும் கூறலாம் என்பார் அறிஞர் தி.வை. சதாசிவப் பண்டாரத்தார். எனவே, திருஞானசம்பந்தர் காலத்தில் இங்குக் கோயில் இருந்தது என்று உறுதிப்படுத்தலாம்.

இக் காலத்துள்ள திருக்கொடுங்குன்றத் தலக் கோயில்கள் பிற்காலச் சோழமன்னர்களாலும் பாண்டிய மன்னர்களாலும் விஜயநகர மன்னர்களாலும், இராமநாத புரம் மன்னர்களாலும், சிவகங்கை மன்னர்களாலும் அவரவர் காலங்களில் எடுப்பிக்கப் பெற்றுப் படிமுறையில் அமைந்துள்ளது என்பது தெளிவு. ஆனால் எந்தெந்த மன்னர்கள் காலத்தில் என்னென்ன திருப்பணிகள் செய்யப் பெற்றன என்பது தெரியவில்லை. எனினும் கிடைக்கும் சான்றுகளை ஒன்றிரண்டையாவது சிந்திக்கலாம்.

**இரண்டாம் பராந்தகன் சுந்தரசோழன் (கி பி 957-970)**

திருக்கொடுங்குன்ற நாதர் திருக்கோயில் மண்டபத் திருச்சுற்றில் தென்புறமதிலில் சிதைந்துபோன கல்வெட்டு ஒன்று'' ''திருநெலக்குன்றமான சுந்தரராசச்சதுர்வேதி மங்கலத்து'' என இவ்வூரைக் குறிப்பிடுகிறது. எனவே திருக்கொடுங்குன்றம் இரண்டாம் பராந்தகனாகிய சுந்தர சோழன் பெயரால் சதுர்வேதிமங்கலமாகப் பெயர்பெற்றிருந்தது எனலாம் என்பர் அறிஞர். இந்தச் சோழன் பாண்டிய நாட்டில் படையெடுத்து வெற்றி கண்டவன். எனவே இந்தச் சோழன் காலத்தில் இத்திருக்கோயிற்பணி ஏதேனும் நடந்திருக்கலாம்.

**துவாரபதி வேளார்**

''ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டான் உடையார் திருக்கொடுங் குன்றமுடைய நாயனார் கோயில் தானத்திற்கு-இன்னாயனாற்கு துவார

பதி வேளார் கடைகட்டின பூபால புரந்தரன் சனத்திற்கு', (S.I.I. Vol VIII No. 433) என்று இக்கோயில் கல்வெட்டு (கி.பி. 1104) தெரிவிக்கிறது. ஆதலால் இங்குள்ள பைரவர் திருக்கோயிலை கி.பி. 1104க்கு முன்னர் துவாரபதி வேளான் கட்டியிருக்கிறான் என்று அறிகின்றோம்.

**முதற்குலோத்துங்கச் சோழன் (கி.பி 107-1120)**

மங்கைபாகர் குடைவரைக் கோயில் முகப்பு மண்டபப் பகுதியில் வலது புறப் பாறையில் உள்ள சிதைவடைந்த கல்வெட்டு "ஸ்வஸ்திஸ்ரீ சக்கரவர்த்திகள்ஸ்ரீ கொலொத் துங்க சோழ தேவற்கு யாண்டு 35-வது (கி.பி.1105) இராஜராஜப்பாண்டி நாட்டு" என்று தெரிவிக்கிறது. இந்தக் கல்வெட்டுக் குறிப்பின் அடிப்படையில் மங்கை பாகர் குடை வரைக் கோயில் குலோத்துங்க சோழன் அமைத்ததாகலாம் என்று கருதுவார் பேராசிரியர் சி கோவிந்தராசனார். குடை வரையின் அமைப்பைக் கொண்டு இது பாண்டியர் காலத்துக் குடைவரைக் கோயி லாகலாம் என்பார் டாக்டர் இரா. கலைக்கோவன். இவ் விரு கருத்துக்களும் சிந்திக்கத் தக்கவ.

முதற் குலோத்துங்க சோழன் இக் கோயிலுக்கு வந் திருந்த செய்தி இக்கோயில் கல்வெட்டொன்றில் "ஸ்வஸ்தி ஸ்ரீ யாண்டு 34 ஆவது நாள் 228 குலவீர தாவளத்தில் எழுந்தருளியிருக்க நினைப்புடையார்" என்று காணப்படு கிறது. இது கி.பி. 1104 ஆம் ஆண்டுக் கல்வெட்டு. இத்திருக் கோயிலுக்கு மேல் தளத்தில் இருந்த இந்தச் சோழன் ஏதேனும் திருக்கோயில் விரிவாக்கத் திருப்பணி செய்திருக் கக் கூடும் எனலாம்.

**மாறவாமன் சுந்தர பாண்டியன் (கி.பி 1216-1238)**

இவன் ஆற்றலாலும் வீரத்தாலும் பாண்டிய நாட்டை நன்னிலைக்குக் கொண்டு வந்து பேரரசு நிறுவியவன்.

மூன்றாம் குலோத்துங்கசோழனை வென்றவன். ஆதலால் பாண்டிய நாட்டு எல்லையில் அமைந்த இத்திருக்கோயிலைச் சுற்றி மிகப் பெரிய சுற்றுமதில் எடுத்துள்ளான். கோட்டை போன்ற இந்தப் பெருமதில் கொத்தளமுடையது.

மங்கைபாகர் கோயில் தேவசபா மண்டபத்திற்குக் கிழக்கே உள்ள மண்டபம் சுந்தர பாண்டியன் மண்டபம் எனப்படுகிறது.

**இராஜ நாராயணா என்னும் புவனேகவீரர்**

இவன் "கொடுங்குன்றனார் என்று அழைக்கப்படும் சந்ததிரிபதி (சிவம்) கோவிலுக்குப் பரந்த உயர்ந்த கோபுரத்தைக் கட்டினான்" என்று இக்கோயில் கல்வெட்டு கூறுகிறது. இது இராஜகோபுரமா? விமானமா? என்பது தெரியவில்லை. இராஜகோபுரமாயின் அது அயலவர் படையெடுப்பால் அழிந்து விட்டதாகக் கொள்ள வேண்டும்.

**அருவியூர் நகரத்தார் (கி.பி. 14 ஆம் நூற்றாண்டு)**

அறு நூற்று ஐம்பது ஆண்டுகளுக்கு முன் அருவியூர் நகரத்தார் பெருமக்கள் திருக்கொடுங் குன்றநாதர் கோயில் திருப்பணி செய்ததாக மிதிலைப்பட்டி முத்து ராமலிங்கக் கவிராயர் பாடியுள்ளார்.

"வீறுகொள் வேடர் தன்பால் மிகுபொருள் நல்கி ஆறு
நூறுகொள் ஆண்டின் முன்னே நுண்ணிடை
உமையா ளோடு
கூறுகொள் கொடுங்குன் றீசர் தம்மையும்
கொண்டு பத்திப்
பேறுகொள் அருவியூரார் பிறங்கிடக் கோயில்
செய்தார்'

என்பது அந்தப் பாடல். அன்னை குயிலமுத நாயகி கோயில் திருப்பணி இவர்கள் செய்ததே என்பதை அக்கோயில் திருச்சுற்றுத் தூண்களில் உள்ள அருவியூர் நகரத்துப் பெரு மக்களின் உருவச் சிலைகள் மௌன மொழியில் சொல்லிக் கொண்டிருப்பதால் அறிகிறோம்.

**சிவகங்கை மன்னர்கள்**

இவர்கள் காலத்தில் அடிவாரத்தில்-திருவாசலுக்குத் தெற்கேயுள்ள துரைராஜ் மண்டபம் கட்டப்பற்றுள்ளது.

**திருவண்ணாமலை ஆதீனம் 45 ஆவது மகாசந்நிதானம் அவர்கள்**

இவர்கள் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதினத்தின் சின்னப்பட்டமாக 1949 இல் எழுந்தருளி 1952 இல் மகாசந்நிதானமாக எழுந்தருளியவர்கள். தவத்திரு. குன்றக் குடி அடிகளார் என்று தமிழக மக்களால் போற்றப்படுபவர் கள். 1956 இல் இவர்கள் இத்திருக்கோயிலுக்கு மின்வசதி ஏற்படுத்தி அருளினார்கள். ஆயிரக்கணக்கான வெண்பொற் காசுகள் செலவு செய்து1954. 1957 ஆகிய ஆண்டுகளில் திருக்கோயிலைப் பொலிவுடைய தாக்கி 1957இல் திருக்குட நீராட்டு விழாச் செய்வித்தருளினார்கள்.

**இன்றைய திருப்பணி**

திருவருள் திரு மகாசந்நிதானம் அவர்கள் மிகப் பெரிய கோயிலான இதனை முழுமையாகத் திருப்பணி செய்யத் திருவுள்ளம் கொண்டார்கள். ஆதீனத் திருக் கோயில் பொறுப்பில் சிறுக, சிறுக, சில ஆண்டுகளாகத் திருப்பணி வேலை நடைபெற்றுக் கொண்டேயிருந்தது. இந்த நிலையில் அருவியூர் வடக்குவளவு நகரத்தார்களும். அருவியூர் தெற்கு வளவு நகரத்தார்களும் மங்கைபாகர். திருக்கோயில் திவிப்பணி புதிய இராஜகோபுரத் திருப் பணிப் பொறுப்பை ஏற்றுக் கொண்டனர். பைரவசுவாமி

திருக்கோயில் திருப்பணிப் பொறுப்பை பிரான்மலை—மதகு பட்டிக்கிராமம் முத்துராஜா சமூகத்தினர் ஏற்றுக்கொண் டனர். வேறு சில திருப்பணிப் பொறுப்புக்களை பிரான் மலை ஊரார்கள் ஏற்றுக்கொண்டனர். இந்துசமய அற நிலையத்துறை இயன்ற உதவி செய்தது. ஆதீனத் திருக் கோயில் இவையல்லாத எல்லாத் திருப்பணிகளையும் ஏற்றுச் செய்தது. பல மெய்யன்பர்களின் நல் உதவிகளும் சேர்ந்தன. இந்த மாபெரும் திருப்பணியில் மெய்யன்பர்கள் ஆர்வச் செறிப்புடன் ஈடுபட்டுச் செய்துள்ளனர், எல்லாரும் சேர்ந்து இறைபணி யாற்றியதால் அவர்கள் யாவரும் இன்று சிவகணங்களாகித் திருவருளுக்குரியவராகித் திகழ் கின்றனர்.

**திருவருள்பெறுவோம்**

20. 4. 1992, திங்கட்கிழமை ஒரு புண்ணியநாள், அன்று காலை 9.30 - 10. 30 மணிக்குட்பட்ட நேரம், எல்லா உலகிற்கும் அம்மையும் அப்பனும் உயிர்கள் மாட்டுக் கொண்ட பெருங் கருணை, அமுதப் பேராறாகப் பொங்கித் ததும்பி எங்கும் நிறையும் புண்ணியநேரம்! அந்த அருளா ரமுத வெள்ளத்தில் திளைத்து எல்லா நன்மையும் எய்திச் சேர வாரும் செகத்திரே!

திருக்கொடுங்குன்றம் (பிரான் மலை)

திருப்பதிகம்

திருஞான சம்பந்த சுவாமிகள் அருளியது
பண் - நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

2. வானிற்பொலி வெய்தும்மழை மேகங்கிழித் தோடிக்
கூனற்பிறை சேருங்குளிர் சாரற்கொடுங்குன்றம்
ஆனிற்பொலி யைந்தும் அமர்ந் தாடியுலகேத்தத்

தேனிற்பொலி மொழியாளோடு மேயான்றிருநகரே

கூனல் பிறை வானமண்டலத்தில் அழகிய கரிய மழை மேகங்களைக் கிழித்து ஓடிச்சென்று மறையும் குளிர் சாரலை உடைய கொடுங்குன்றம்; ஆனைந்தை (பஞ்ச கவ்வியம்) விரும்பி ஆடி, தேனைப் போலும் மொழி பேசும் உமையம்மையோடு உலகம் போற்ற சிவபிரான் எழுந்தருளிய திருநகரமாகும்.

2. மயில்புல்குதன் பெடையோடட னாடும்வளர்சாரல்
குயிலின்னிசை பாடுங்குளிர் சோலைக்கொடுங்குன்றம்
அயில்வேன்மலி நெடுவெஞ்சுட ரனலேந்திநின்றாடி
எயில்முன்பட வெய்தானவன் மேயவ்வெழினகரே

மயில் தன் பெடையைத் தழுவிக்களித்து ஆடும் சாரலையும், குயில் இன்னிசை பாடும் சோலைகளையும்; உடைய கொடுங்குன்றம் கூரிய வேலையும், கொடிய நெருப்பையும், ஏந்தி ஆடித்திரிபுரங்களை அழித்த சிவபெருமான் உறையும் அழகிய நகராகும்,

3. மிளிரும்மணி பைம்பொன்னொடு விரைமாமலருந்திக்
குளிரும்புனல் பாயுங்குளிர் சாரற்கொடுங்குன்றம்
கிளர்கங்கையொ டிளவெண்மதி கெழுவுஞ்சடை
தன்மேல்வளர்கொன்றையும் மதமத்தமும் வைத்தான்
வளநகரே

அருவி விளங்கும் மணிகளையும், பைம்பொன்னையும், மணமலர்களையும் ஏந்தி வந்து பாயும் குளிர்ந்த சாரலை உடைய கொடுங்குன்றம்: பொங்கும் கங்கை இளவெண் பிறை ஆகியன பொருந்திய சடைமுடிமீது கொன்றை ஊமத்தை ஆகியவற்றை அணிந்த சிருபெருமானது வளநகராகும்.

பருமாமத கரியோடரி யிழியும்விரிசாரல்
குருமாமணி பொன்னோடிழி யருவிக்கொடுங்குன்றம்

பொருமாவெயில் வரைவிற்றரு கணையிற்பொடி
செய்த
பெருமானவ ருமையாளொடு மேவும் பெருநகரே

பருத்த மதயானைகளோடு சிங்கங்கள் இறங்கி வரும் சாரலையும், நிறம் பொருந்திய அழகிய மணி, பொன் ஆகியவற்றை அடித்துவரும் அருவி பாய்வதுமாகிய கொடுங்குன்றம்; தன்னோடு பொரவந்த முப்புரங்களை, மலைவில்லில், தொடுத்த கணையொன்றால் பொடி செய்த சிவபெருமான் உமையம்மையாரோடு மேவும் பெரிய நகரமாகும்.

மேகத்திடி குரல்வந்தெழு வெருவில்வரையிழியும்
கூகைக்குல மோடித்திரி சாரற்கொடுங்குன்றம்
நாகத்தொடு மிளவெண்பிறை சூடிந்நலமங்கை
பாகத்தவ னிமையோர்தொழ மேவும்பழநகரே

கூகைகள் மேகங்களில் இடிமுழக்கங்களைக் கேட்டு வெருவித் திரியும் சாரலை உடைய கொடுங்குன்றம்; நாகம், பிறைமதி ஆகியவற்றை முடிமீது சூடி அழகிய உமைபாகராய்ச் சிவபெருமான் தேவர்கள் தொழ எழுந்தருளிய பழமையான நகரமாகும்.

கைம்மாமத கரியின்னின மிடியின்குரலதிரக்
கொய்ம்மாமலர்ச் சோலைபுக மண்டுங்கொடுங்குன்றம்
அம்மானென வுள்கித்தொழு வார்கட்கருள்செய்யும்
பெம்மானவ னிமையோர்தொழ மேவும்பெருநகரே

யானைகள் இடியோசையைக் கேட்டுக் கிழிறங்கி, கொய்யத்தக்க நறுமலர்களை உடைய சோலைகளில் மிகுதற்குக் கூடிவரும் கொடுங்குன்றம், தன்னைத் தலைவன் என நினைந்து, மனமுருகி வழிபடும் அடியவர்கட்கு, அருள் செய்யும் சிவபெருமான், இமையவர் தொழ உறையும் பெரிய நகரமாகும்.

மரவத்தொடு மணமாதவி மௌவல்லதுவிண்ட
குரவத்தொடு விரவும்பொழில் சூழ்தண்கொடுங்
குன்றம்
அரவத்தொடு மிளவெண்பிறை விரிவும்மலர்க்
கொன்றை
நிரவச்சடை முடிமேலுடன் வைத்தானெடுநகரே

கடம்பு, குருக்கத்தி, முல்லை, குரா ஆகிய மணம் உள்ள மரவகைகளையும் செடிவகைகளையும் உடைய சோலைகள் சூழ்ந்துள்ள கொடுங்குன்றம்; பாம்பு, பிறை கொன்றை மலர் ஆகியவற்றைத் தன் முடிமீது அணிந்துள்ள சிவபெருமானது பெரிய நகரமாகும்.

முட்டாமுது கரியின்னினமுதுவேய்களை முனிந்து
குட்டாச்சுனை யவைமண்டிநின் றாடுங்கொடுங்
குன்றம்
ஒட்டாவரக் கன்றன்முடி யொருபஃதவையுடனே
பிட்டானவ னுமையாளொடு மேவும் பெருநகரே

பெரியயானை இனங்கள் தடையின்றிச் சென்று மூங்கில் இலைகளை வெறுக்கத்தின்று மலைமிசை உள்ள சுனைகளில் கூடி நீராடும் கொடுங்குன்றம்; தன்பால் மனம் பொருந்தாத இராவணன் கயிலைமலையைப் பெயர்த்த போது அவனது பத்துத் தலைகளோடு அவனது உடலை நெரித்த சிவபெருமான் உமையம்மையோடு மேவும் பெரு நகராகும்.

அறையும்மரி குரலோசையை யஞ்சியடுமானை
குறையும்மன மாகிம்முழை வைகுங்கொடுங்குன்றம்
மறையும்மவை யுடையானென நெடியானென
வவர்கள்
இறையும்மறி வொண்ணாதவன் மேயவெழினகரே

அறைந்து கொல்லும் வலிய சிங்கத்தின் கர்ச்சனையைக் கேட்டு அஞ்சிய யானைகள் தம் வன்மை குறைந்து மலை முழைகளில் சென்று தங்கும் கொடுங்குன்றம்; வேதங்களை உடையவனாகிய நான்முகன், நெடியவனாகிய திருமால் ஆகிய இருவரும் சிறிதும் அறிய வெண்ணாதவாறு ஓங்கி அழலுருவினனாய் நின்ற சிவபெருமான் எழுந்தருளிய அழகிய நகரமாகும்.

மத்தக்களி றாளிவ்வர வஞ்சிம்ம லைதன்னைக்
குத்திப்பெரு முழைதன்னிடை வைகுங்கொடுங்குன்றம்
புத்தரொடு பொல்லாமனச் சமணர்புறங்கூறப்
பத்தர்க்கருள் செய்தானவன் மேயபழநகரே

மதம் பொருந்திய யானை யாளியின் வரவினைக் கண்டு அஞ்சி மலையைக்குத்திப் பெருமுழை உண்டாக்கி அதனிடைவைக்கும் கொடுங்குன்றம்; புத்தர்களும், தீய மனமுடைய சமணர்களும் புறங்கூறத் தன் பக்தர்களுக்கு அருள் செய்யும் சிவபெருமான் எழுந்தருளிய பழமையான நகரமாகும்.

கூனற்பிறை சடைமேன்மிக வுடையான்கொடுங்
குன்றைக்
கானற்கழு மலமா நகர் தலைவன்னலகவுணி
ஞானத்துயர் சம்பந்தன நலங்கொடமிழ்வல்லார்
ஊனத்தொடு துயர்தீர்ந்துல கேத்தும்மெழிலோரே

வளைந்த பிறையைச் சடைமேல் அழகு மிகுமாறு சூடிய சிவபெருமானது கொடுங்குன்றத்தைப் போற்றிக் கடற்கரையை அடுத்த சோலைகளையுடைய கழுமல நகரின்தலைவனும் நல்லகவுணியர் கோத்திரத் துதித்தவனும், ஞானத்தால் உயர்ந்தவனுமாகிய சம்பந்தன் பாடிய நல்ல தமிழ்ப்பாடல்களை ஓதவல்லவர் குறைபாடுகள் அற்றுத் துன்பங்கள் தீர்ந்து உலகேத்தும் சிறப்புக்களை அடைவர்.

திருச்சிற்றம்பலம்

# திருப்புகழ்

1. அனங்க னம்பொன் றஞ்சுந் தங்குங் கண்களாலே
அடர்ந்தெ ழும்பொன் கும்பங் கொங்கையாலே
குன்றங்
குனிந்து மன்றங் கண்டுந் தண்டும் பெண்களாலே
முடங்கு மென்றன் தொண்டுங் கண்டின்
நின்புறாதோ
தெனந்தெ னந்தென்தெந்தெந் தெந்தெந்தெந்தனானா
செறிந்த டர்ந்துஞ் சென்றும் பண்பின் தும்பிபாடக்
குனிந்தி லங்குங் கொம்புங் கொந்துந் துன்றுசோலைக்
கொழுங்கொ டுந்தின் குன்றந் தங்குந்
தம்பிரானே.[1]

2. எதிர்பொருது கவிகடின கச்சுக்களும் பொருது
குத்தித்தி றந்துமலை
இவைகளென வதிருகம தப்பட்டு நின்றொழுகி
முத்துச்செ றிந்தவட
மெனுநிகள மவையறவு தைத்திட்ட ணைந்துகிரி
விற்கொத்து மங்குசநெ ருங்குபாகர்
எதிர்பரவ உரமிசைது கைத்துக்கி டந்துடல்ப
தைக்கக்க டிந்துமிக
இரதிபதி மணிமவுலி யெற்றித்ரி யம்பகனு
முட்கத்தி ரண்டிளகி
இளைஞருயிர் கவளமென மட்டித்த சைந்தெதிர்பு
டைத்துச்சி வந்து பொரு\ கொங்கையானை
பொதுவில்விலை யிடுமகளிர் பத்மக்க ரந்தழுவி'
யொக்கத்து வண்டமளி
புக இணைய வரிபரவு நச்சுக்க ருங்கயல்கள்
செக்கச்சி வந்தமுது

பொதியுமொழி பதறஅள கக் கற்றை யுங்குலை
முத்தத்து டன்கருணை தந்துமேல் வீழ்
புதுமைதரு கலவிவலை யிற்பட்ட ழுந்தியுயிர்
தட்டுப்ப டுந்திமிர
புணரியுத தியில்மறுகி மட்டற்ற இந்திரிய
சட்டைக்கு ரம்பையழி
பொழுதினிலும் அருள்முருக சுத்தக்கொ டுங்கிரியி
னிர்த்தச்ச ரண்களைம றந்திடனே

திதிதிதி திதிதிதி தித்தித்தி திந்திதிதி
தத்தத்த தந்ததத
தெததெதத தெததெதத தெத்தெத்தெ தெந்ததெத
திக்கட்டி கண்டிகட
ஜெகணகெண கெண ஜெகுத தெத்தித்ரி யந்த்ரித
தக்கத்த குந்தகுர்த திந்திதிதோ
திகுடதிகு தொகுட தொகு திக்கட்டி கண்டிகட
டக்கட்ட கண்டகட
டிடிடுடுடு டிடிடுடுடு டிக்கட்டி கண்டிகட
டுட்டுட்டு டுண்டுடுடு
திகுதிகு திகுதிகு திக்குத்தி குந்திகுகு
குக்குக்கு குங்குகுகு என்றுதாளம்
முதிர்திமிலை கரடிகையி டக்கைக்கொ டுந்துடியு
டுக்கைப்பெ ரும்பதலை
முழவுபல மொகுமொகென வொத்திக்கொ டும்பிரம
கத்திக்க ளும்பரவு
முகடுபுகு வெகுகொடிகள் பக்கத்தெ முந்தலைய
மிக்கக்க வந்தநிரை தங்கியாட
முதுகழுகு கொடிகருட னெக்கத்தி ரண்டுவர
வுக்ரப்பெ ருங்குருதி
முழுகியெழு பயிரவர்ந டித்திட்ட கண்டமுப்வெ
டிக்கத்து ணிந்ததிர
முடுகி வரு நிசசரரை முட்டச்சி ரந்திருகி
வெட்டிக்க ளம்பொருத தம்பிரானே!

---

சாகித்திய அகாதமி, தமிழ்ப்பல்கலைக்கழகம், தமிழக அரசு

## பரிசு பெற்ற நூல்கள்

கம்பர் - டாக்டர் வ. சுப. மாணிக்கம்
வீரர் உலகம் - கி. வா. ஜகந்நாதன்
மணிக்கொடி காலம் - பி. எஸ். ராமையா
பரிபாடல் திறன் - டாக்டர் இரா. சாரங்கபாணி
திருக்குறள் கூறும் உறுதிப் பொருள் - டாக்டர் சோ. ந. கந்தசாமி
உரையாசிரியர்கள் - மு. வை. அரவிந்தன்
ஊருக்குள் ஒரு புரட்சி - சு. சமுத்திரம்
வேரில் பழுத்த பலா - சு. சமுத்திரம்
உலகப் பெருங்கவிஞர் கம்பர் - இரா.வ. கமலக்கண்ணன்
தமிழ் மொழி வரலாறு - டாக்டர் சு. சக்திவேல்
திருமுறையும் திருக்கோயில்களும் - புலவர் செந்துறைமுத்து
தாகூர் - ச. மெய்யப்பன்
திருவருட்பாச் சிந்தனை - வெள்ளைவாரணனார்
சுற்றுலா வளர்ச்சி - வெ. கிருட்டிணசாமி
கலைவாணன் கவிதைகள் - அப்புலிங்கம்
இசையியல் - வெற்றிச் செல்வன்
தமிழகக் கலை வரலாறு - க. சி. கமலையா
வண்ணங்கள் வடிவங்கள் - தேனுகா
இலக்கண வரலாறு - இளங்குமரன்
கம்ப்யூட்டர் - வி. மோகனசுந்தரம்
தமிழ்நாட்டுச் சத்திரங்கள் - கு. தாமோதரன்
கல்லெழுத்துக் கலை - நடன காசிநாதன்
சிறுவர் நல்வழிப் பாடல்கள் - நாரா. நாச்சியப்பன்
இந்திய அரசமைப்பு - வே. தில்லைநாயகம்
தொழுநோய் - ஜி. செல்வராஜ்
மொழி வளர்ச்சியும் மொழி உணர்ச்சியும் - டாக்டர் செ.வை. சண்முகம்
தமிழ் நூல் தொகுப்புக் களஞ்சியம் - சுந்தரசண்முகனார்
இரணியூர்க் கோயில் - மா. சந்திரமூர்த்தி

# கவிஞர் மரு. பரமகுரு

பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் மாவட்டத்தின் சேதுரகுநாத பட்டணத்தில் 1936 இல் பிறந்த கவிஞர் மரு. பரமகுரு, தமது பதினாறாவது வயதிலிருந்தே கவிதை இயற்றும் ஆற்றலுடையவராகத் திகழ்கிறார்.

ஆசிரியரின் ''பாரதியின் இலக்கிய விருந்து'' எனும் கட்டுரை, 1957 இல் ராஜாசர் முத்தைய செட்டியார் நடத்திய 'பாரதி விழா'க் கட்டுரைப் போட்டியில் முதல் பரிசினைப் பெற்றது.

தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் இலக்கியப் பிரிவு உதவியாளராக 1968 முதல் பணியாற்றி வருவதைக் கிடைத்தற்கரிய 'வாழ்வுப்பேறா'கக் கருதி மகிழ்கிறார்.

'குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீன வரலாறு' எனும் நூல் உருவாக்கி, தவத்திரு அடிகளார் அவர்களால் பாராட்டப் பெற்று, 'ஆதீனப் புலவர்' எனும் சிறப்புப் பெற்றுள்ளார்.

'குன்றக்குடி ஆறுமுகப் பெருமான் பாமாலை' படைத்து கவிஞர் பலரால் போற்றப் பெற்றுள்ள மரு. பரமகுரு இலக்கிய உள்ளமும், இனிய இயல்பும் கொண்டவர். தமிழ்த் துறையைச் சார்ந்த ஆய்வாளர் பலருக்கு வழிகாட்டி, வழி நடத்தி உள்ளார்.